

AL-JAMIYATUL-ISHAA-AT-EHLUS-SUNNA;
No., 105, Second Cross Street, Colombo - 11. Sri Lanka
Tel : 325751; Fax : 449055

# அண்ணல் நபியின் அருமையும்

தமிழாக்கம்

மௌலவி இப்றாஹீம் அஹ்மத்
அல் அஸீஸி தாமத்
பறகாதஹும்

دع ما ادعته النصارى في نبيهم
واحكم بما شئت مدحا فيه واحتكم

# تعظيم نبي ﷺ

مولف با للغة الاردوية

فقيه ملت جلال الدين احمدامجدي

نورالله مرقده

مترجم الى اللغة التاملية

حضرت مولوي ابراهيم العزيزى

طول الله حياته

وقف لله تعالى يهدي ولايباع

المشروع الخيري





AL-JAMIYATUL-ISHAA-AT-EHLUS-SUNNA;
No., 105, Second Cross Street, Colombo - 11. Sri Lanka
Tel : 325751; Fax : 449055



| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | :- | அண்ணல் நபியின் அகமியம் |
| உர்தூ மூல நூல் ஆசிரியர் | :- | மௌலானா முப்தி ஜலாலுத்தீன் அஹ்மத் அம்ஜதி ரஹ்மதுல்லாஹி அலைஹி |
| தமிழாக்கம் | :- | மௌலவி இப்றாஹீம் அஹ்மத் (அல் அஸீஸி) |
| பக்கம் | :- | 64 |
| வெளியீடு | :- | ஜம்ஈய்யத் இஷாஅத் அஹ்லுஸ்ஸுன்னாஹ் 2ம் குறுக்குத் தெரு, 105, கொழும்பு - 11 |
| தொடர் இலக்கம் | :- | 10 |
| முதற்பதிப்பு | :- | ஏப்ரல் 1997 துல்கஅதா 1417 |
| அச்சிட்டோர் | :- | Rainbow Printers Chennai - 600034. |




# முதற்கண்

بسم ا لله الرحمن الرحيم
نحمده ونصلي على رسوله الكريم

சங்கைக்கும் பெருமதிப்புக்கும் உரித்தான மஹ்பூபே இலாஹீ ஷபீஉல் முத்னிபீன் அஹ்மதே முஜ்தபா முஹம்மதே முஸ்தபா கருணைக்கடல் நபிகட்கரசர் படைப்பில் ஆரம்பமான வரும், நபிமார் களில் கடைசியானவரும், இருலோகத் தலைவருமான நபியே கரீம் ﷺ அவர்களுக்கு இவ்வுலகில் வாழ்ந்த காலம் முதல் இன்று வரை அனைத்து ஸஹாபாக்கள், தாபிஈன்கள், தபஅத்தாபிஈன்கள், உலமாக்கள், அறிஞர்கள், மஷாயிகின்கள்எல்லோரும் மேலும் அனைத்து முஸ்லிம் பொதுமக்களும் அந்தஇறைத் தூதர் உலக அருட்கொடையான நபி ﷺ அவர்களுக்கு எவ்விதமெல்லாம் தஃழீம் மரியாதை கண்ணியம் கௌரவம் செய்யலாமோ அதில் அணுவல வேனும் திறக்குறைச்சல் செய்யாது புரிந்து வந்துள்ளனர். இன்றும் புரிகின்றனர்.

ஆனால் இந்த 20ம் நூற்றாண்டில் முஸ்லிமான பெற்றோர் களுக்கு பிறந்த, முஸ்லிம் என பெயரும் சூட்டிய, திருக்கலிமாவை மொழிந்த, முஸ்லிம் அரபு மத்ரசாக்கலுக்குச் சென்று புனித குர் ஆனையும், ஹதீது, பிக்ஹ், இலக்கணம், மன்திக், பலாகா படித்து உலமாக்கள் எனும் பட்டம் கொண்ட "ஜாஹில்கள்" சிலர்அந்த பியாரே ரசூல் ﷺ அவர்களுக்கு மரியாதை செய்யும்நோக்குடன் எழுந்து நின்றால் அல்லது மீலாத் மேடைகள்அமைத்தால், வீடுகளில், வியாபாரஸ்தலங்களில், இறை இல்லங்களில்,சோடினை செய்து மின் குமிழ்களை எரியச் செய்தால் மௌலித்மஜ்லிஸ்களை ஏற்பாடு செய்து

உணவளித்தல், கந்தூரிகொடுத்தல், இவைபோன்ற எத்தனையோ அம்ஷங்களை ஷிர்க், குப்ர், பித்அத் என்று அவைகளைப் புரிவோர்களை வழிகெட்டோர், பித்அத்தியர்கள், கப்று வணங்கிகள் என்றெல்லாம் பட்டம்சூட்டுகின்றனர். இவர்கள் கூறும் கருத்துக்களை இவர்களின் தாடியையும் வணக்கங்களையும் கண்டு ஏமார்ந்து போகும் ஒன்றுமறியா பாமரர்கள் உண்மை என நம்பிவிடுகின்றனர்.

இப்படியான சூழ்நிலையில் படித்தவர்களும், பாமரர்களும் அண்ணல் நபி ﷺ அவர்களின் உயர்தன்மையை அன்னாரின் அகமியத்தை அறியவேண்டும் என்பதற்காக சில வரிகளில் அம்மகானுக்கு கொடுக்கப்பட்டுள்ள தஃழீமைப்பற்றி குறிப்பிட்டுள்ளோம்.

யா அல்லாஹ்! அடியான் செய்திருக்கும் இச்சிறு பணியை ஏற்றுஇதன் மூலம் மனித சமுதாயம் நேர்வழி செல்ல நல்லுதவி புரிவாயாக! மேலும் நபி நாதர் ﷺ அவர்கள் பொருட்டால் எங்கள் தவறுகளை குற்றம் குறைகளை மறைப்பாயாக! ஆமீன்.

بجاه طه صلى الله عليه وسلم

அடியான்
**இப்ராஹீம் அல் அஸீஸி**



لك الحمديا الله والصلاة والسلام عليك

يارسول الله ﷺ

" தஃழீம்" என்பதன் பொருளாகிறது :- சொல்லால் அல்லது செயலால் யாராவது ஒருவருக்கு மரியாதை செய்து கண்ணியப் படுத்துவதை வெளிப்படுத்துவதாகும். எனவே எல்லா சிறுவர்களும் எவர்கள் உண்மையில் தன்னை சிறியவர்கள் எனக் கருதுகின்றார்களோ அவர்கள் யாவரும் அவர்களை விடப் பெரியோர்களுக்கு மரியாதை செய்கிறார்கள். மேலும் எச்சந்தர்பத்திலும் அவனின் பெருந்தன்மையை வெளிப்படுத்துகின்றான். மாணவன் தனது ஆசிரியருக்கும், முரீது தனது ஷெய்குக்கும், பிள்ளை தனது பெற்றோர், பாட்டன்மார்களுக்கும், வேலையாலன் தனது எஜமானுக்கும், எதுவரை என்றால் சிறிய சகோதரன் தனதுபெரிய சகோதரனுக்கும் மரியாதை, கண்ணியம் செய்கின்றான். மேலும் இப்படியாக ஏன் கண்ணியம் செய்ய வேண்டும். திருநபி ﷺ திருவாய் மலர்ந்தார்கள்.

قال النبي صلى الله عليه وسلم ليس منا

من لم يرحم صغيرنا و لم يوقر كبيرنا(ترمذي

مشكوة ص٤٢٣

**பொருள்:-**

எங்களில் எவர் சிறியோருக்கு இரக்கம் காட்டி கண்ணியம் செய்யவில்லையோ மற்றும் பெரியோருக்கு மரியதை செய்ய வில்லையோ அவர் எம்மைச் சார்நதவரல்ல. (மிஷ்காத், திர்மிதி பக்கம் 423)

ஆனால் ஓர் உண்மையான முஸ்லிம் தனது அருமை நபி ﷺ அவர்களுக்கு மரியாதை செய்யும் முகமாக கண்ணியம் புரிந்து கௌரவப்படுத்திடுவானால், அவனை பித்அத்தி (நூதன செயலை புரிபவன்) வழி கெட்டவன், கெட்ட கொள்கையைக் கொண்டவன்எனத் திர்ப்பு செய்ப்படுகின்றது. மேலும் அந்த நபிக்கு மதியாதை செய்வதனால் காபிராகுவதில்லை என்றிருந்தும் அவன் மீது காபிர் என பத்வா மார்கத்திர்ப்பு வழங்கப்படுகின்றது. என்றாலும் நபிக்கு கண்ணியம் செய்வதை மறுப்பது குப்ராகும். அது எப்படிப்பட்ட குப்ர் என்றால் மனிதன் பிறந்த பின்னர்எல்லாவற்றையும் விட ஆரம்பத்தில் உருவாகுமே அத்தகயஒன்றாகும். ஏனைய குப்ர் அதன் பின்னரே உருவனதாகும். இறைவன்தன் திருமறையில்

واذ قلنا للملئكة اسجدوا لآدم فسجدوا الا

ابليس ابى واستكبر وكان من الكافرين

பொருள்:-

நாம் அமரர்களைப் பார்த்து நபி ஆதம் (அலை) அவர்களுக்கு ஸுஜூது செய்யுங்கள் எனக் கூறியதை நினைவு செய்து பாருங்கள். எனவே அவர்களில் இப்லீசைத் தவிர எல்லோரும் ஸுஜூது செய்தார்கள். அவனோ நிராகரித்து பெருமை அடித்தான். மேலும் காபிராகப் போய்விட்டான்.

மதாரிக் ஷரீபில் "கானமினல் காபிரீன்" என்ற வாக்கியத்திற்கு விரிவுரை செய்கையில் "ஸார மினல் காபிரீன்" அதாவது இப்லீஸ் முதலில் காபிராய் இருக்கவில்லை. மாறாக நபிக்கு மரியாதை செய்வதை மறுத்த காரணத்தாலேயே காபிராக மாறிவிட்டான். மேல் வசனத்தில் நின்றும் நபிக்கு மரியாதை (தஃழீம்) செய்வதை மறுத்ததினால் ஏற்படும் குப்ர் மனிதப் படைப்புக்குப் பின்னர் யாவற்றையும் விட முன்னர் உருவாகுமே அத்தகைய குப்ராகும். ஏனைய குப்ர்கள் யாவும் இதன் பின்னரே உருவானதாகும் என்பது உறுதியாகிவிட்டது.

ஆனால் யாராவது இந்த ஆயத்தை சஜ்தாவுக்கு மாத்திரம் குறிக்கும் பயான், நபிக்கு கண்ணியம் செலுத்தும் விடயத்தில் இல்லையே எனக் கூறினால், அதற்கு பதிலாகிறது:- அதாவது அல்லாஹ்வுடைய சொல்லின் வெளிப்படை நோக்கம் சஜ்தாவுக்கே! ஆனால் அதன் உண்மைத் தத்துவம் நபிக்கு கண்ணியம் செய்வதிலேயே! எப்படி புகஹாக்கலின் தலைவர் ஹஸ்ரத் முல்லா ஜீவன் ﷺ அவர்கள் "சஜதல் மலாயிகத" எனும்சொல்லுக்கு விளக்கம் எழுதுகையில் குறிப்பிடுகிறார்கள்.

سجدظاهرفي سجود الملئكة نص في

تعظيم آدم عليه السلام

பொருள்:-

"சஜத" எனம் சொலிலின் வெளிப்படை நோக்கம் சுஜூத் செய்யும் விடயத்திலாகும். அதன் அந்தரங்க நோக்கமோ நபிக்கு மரியாதை செய்யப்படுவதை நாடப்பட்டதாகும் (நூருல் அன்வார்பக்கம் 87)

لان النص ماسيق الكلام لاجله(اصول الشاشي ص٢١)



## தஃழீமுடைய படித்தரங்கள்

உலக வழக்கில் தஃழீமுக்கு மரியாதை செய்வதற்கு மொத்தமாக நான்கு வகைகள் உள்ளன. அவற்றில் எல்லாத்தையும் விட மிக உயர்ந்த படித்தரத்தில் சுஜூதும், இரண்டாவது ருகூவும், மூன்றாவது இரு கால்களை மடித்து உட்கார்வதும், நான்காவது எழுந்து கைகளைக் கட்டி நிற்பதுமாகும்.

அல்லாஹ் அல்லாத எந்தப் படைப்புக்கும் சுஜூது செய்வது கொண்டு தஃழீம் மரியாதை செய்வது நமது புனித மார்க்கததில் ஹராமாகும். ஹஸ்ரத் அபூ ஹுறைரா ﷺ அவர்களைக் கொண்டு ஹதீது ஷரீப் அறிவுப்புச் செய்யப்பட்டுள்ளது. திரு நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.

لو كنت آمراحداان يسجدلاحدلامرت المرأة

ان تسجد لزوجها (مشكوة شريف ص٢٨١)

பொருள்:-

நான் யாரையாவது எவருக்காவது சுஜூது செய்வதற்கு ஏவுபவனாக இருந்திருந்தால் மனைவிக்கு அவளது கணவனுக்கு சஜ்தா செய்யுமாறு கட்டாயம் கட்டளையிட்டிருப்பேன் (மிஷ்காத் பக்கம் 281)

இந்த ஹதிதுக்கு கீழே ஹஸ்ரத் முல்லா அலீ காரி ﷺ அவர்கள் விளக்கம் எழுதுகிறார்கள்.

السجدة لا تحل لغير الله

அதாவது அல்லாஹ் அல்லாத எந்தப் படைப்புக்கும் சஜ்தா ஆகுமானதல்ல. (மிர்காத், பாகம் 3, பக்கம் 467) மேலும் எழுது கிறார்கள்:-

பொருள்:- السجدة حرام لغيره سبحانه

அல்லாஹ் அல்லாத ஒன்றுக்குச் சஜ்தா செய்வது ஹராமாகும் (ஷரஹ் பிக்ஹ் அக்பர், பக்கம் 230)

மேலும் பதாவா ஆலம்கீரி ஐந்தாம் பாகத்தில், 231 ம் பக்கத்தில் "பதாவா கராயிபில்" நின்றும் உள்ளதாவது

பொருள்:- لا يجوزالسجودالا لله تعالى

(அல்லாஹ் அல்லாத ஒன்றுக்குச் சஜ்தா ஆகுமான ஒன்றல்ல.) இங்கே நாம் கூறிய ஆதாரங்கள் தஃமீமுடைய பிரிவில் எடுத்துக் கூறினாலும் இது "சஜ்தாயே இபாதத்" என்றே பொருளாகும். இன்ஷா அல்லாஹ் சஜ்தா தஃழீம் என்பதைப் பற்றி மிக விரைவில்உன் கையில் தவழவிடுவோம்.

மரியாதை செய்வதற்கான இரண்டாவது படித்தரம் "ருகூஃ" செய்யுமளவுக்கு தலையை குனிந்து யாருக்காவது மரியாதை செய்வதாகும். இதுவும் நமது மார்க்கத்தில் தடுக்கப்பட்டதாகும். "பதாவா

ஆலம்கீரி" பாகம் ஐந்து. பக்கம் 321 யில், "ஜவாஹிர் அல் இக்லாதியில்" நின்றும் உள்ளதாவது.

الانحناء للسلطان اولغيره مكروه لانه يشبه فعل المجوس

பொருள்:-

அரசர்களுக்கோ, அல்லது ஏனையோர்களுக்கோ ருகூஃவுடைய அளவுக்கு தலை குனிந்து மரியாதை செய்வது மக்ரூஹான ஒன்றாகும். ஏனெனில் நிச்சயமாக அச்செயல் நெருப்புவணங்கிகளான "மஜூசிகளுக்கு" ஒப்பான செயலாகும்.

மேலும் ஷாமி பாகம் ஐந்து. பக்கம் 246யில், "முஹீத்" எனும் கிரந்தத்தில் நின்றும் வந்துள்ளதாவது.

يكره الانحناء للسلطان وغيره

பொருள்:-

சுல்தானுக்காகவோ, அல்லது அரசர்களுக்காவோ அல்லது மற்றவர்களுக்கோ ருகூஃவுடைய அளவுக்கு தலை குனிந்து மரியாதை செய்வது வெறுக்கப்பட்ட ஒன்றாகும்.

மீதமானது மூன்றாவதும், நான்காவதும் படித்தரத்தைக் கொண்ட தஃழீமாகும். அதாவது யாருக்காவது மரியாதை தஃழீம் செய்வதற்காக இரு கால்களையும் மடித்து உட்கார்வது, அல்லது எழுந்து நிற்பது. இது நமது மார்க்கத்தில் ஆகுமானதாகும்.இதுதான் பாமரர்கள், படித்தவர்கள் மத்தியில் வழமையில்ஆக்கப்பட்ட ஒன்றாகும்.

எனவே சாபமிடப்பட்ட இப்லீஸ் நபிக்கு மிக உயர்ந்த படித்தரத்தைக் கொண்டு மரியாதை தஃழீம் செய்வதை மறுத்ததினால் அல்லாஹ்வின் திருச் சபையிலிருந்து எடுத்தெறியப்பட்டுவிட்டான் என்பது தெளிவாகிட்டது. எனவே எவன் நபிக்குமரியாதை செய்வதற்காக எழுந்து நிற்பதைக் கூட நிராகரிக்கின்றானோ (அதுவும் தரத்தில் நான்காவது இடத்தைக்கொண்டது) அப்படிப் பட்டவனும் அல்லாஹ்விடத்தில் பதவி மிகஉயர்ந்த படித்தரத்தை கொண்டு சாபமிடப்பட்டவனில் நின்றுமுள்ளவனாகிவிடுவான்.

எப்படி என்றால் யாராவது ஓர் அரசன் தனது நேசருக்கு மரியாதை செய்வதற்காக வேண்டி அவனது சபையில்வீற்றிருப்பவர்களை நோக்கி சுஜூது செய்யுமாறு கட்டளைபிரப்பித்து தனது சபையில் உள்ளவர்களில் யாராவது சஜ்தா செய்வதை நிராகரிப்பானேயானால் தலைவன் (பாதுஷாஹ்)அவனை மர்தூத் (விரட்டப்பட்டவன்) துரத்தப்பட்டவன் என முடிவுசெய்து தனது சபையிலிருந்து வெளியாக்கிவிடுகின்றான். எனவே அவர்களில் நின்றும் அவனது நேசருக்கு மரியாதை செய்வதற்காக எழுந்து நிற்பதைக் கூட நிராகரிப்பாரானால் அவனும்அரசனிடத்தில் சுஜூது செய்ய மறுத்தவன் பெற்ற தண்டனைக்குத்தகுதியானவனாவான்.



## நபி(ஸல்) அவர்களின் தஃழீமின் முக்கியத்துவம்

நபிகள் கோமான் ﷺ அவர்களின் பெருந்தன்மையை நம்பிக்கை கொள்வது ஈமானுடைய ஓர் பகுதியாகும். இதனால் தான் குர்ஆன் நபிக்கு மரியாதை தஃழீம் செய்யும் விடயத்தை விபரிப்பதில் பெரும் கவனம் செலுத்தியுள்ளது.

முதலில் இவ்விதமாக! திருக்குர்ஆனில் அதாவது ஹஸ்ரத் ஆதம்(அலை) அவர்களுக்கும், இப்லீசுக்கும் மத்தியில் இடம் பெற்ற சம்பவத்தை ஏழு இடத்தில் விரிவுடன் விபரித்துள்ளான். ஆனால் ஒருசம்பவத்தை ஏதாவது புத்தகத்தில் இரு விடுத்தம் வர்ணிப்பது குறையானதாகும். குர்ஆனில் இந்த விடயம் ஓர் அழகற்ற விஷயமாக இருந்திருந்தால் முதன் முதலில் மக்கா குறைஷிக்காபிர்கள் புறக்கனித்திருப்பார்கள். மேலும் யுத்தங்கள் செய்வதை விட்டுவிட்டு இக்குறையை மக்கள் மத்தியில் கிண்டிக்கிளறி விட்டிருப்பார்கள். ஆனால் அவர்கள் நன்றாக, அதாவது இஸ்லாத்தில் நபிக்கு மரியாதை தஃழீம் செய்வது பெரும் முக்கியமான அம்சமாகும் என்பதையும் எவ்விடயம், எப்பேச்சு பெரும் முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்குமோ அவ்விடயத்தை அடிக்கடி பலமுறை ஞாபகம் செய்வது குறையானதல்ல என்பதையும் நன்கறிந்திருந்தார்கள்.

ஏனெனில் அல்லாஹுதஆலா குர்ஆனில் நபி ஆதம்(அலை) அவர்களுக்கு மரியாதை செய்வதை நிராகரித்த காரணத்தால் இப்லீஸ் மர்தூத் விரட்டியடிக்கப்பட்ட சம்பவத்தை அடிக்கடி பலமுறை பயான் செய்து நமக்கு நிரூபிக்க நாடுவது யாதெனில்அதாவது:- பரிசுத்த குர்ஆனை ஈமான் கொண்டோரே! நபிக்கு கண்ணியம் மரியாதை தஃழீம் செய்வதை ஒருபோதும் நிராகரிக்காதிர்கள். அப்படி நிராகரிப்பீர்களானால் இப்லீசுக்கு என்ன முடிவானதோ அதே முடிவுதான் உனக்கும், மேலும் நீயும் மர்தூத் விரட்டப்பட்டவன் என முடிவு செய்யப்பட்டுவிடும் என்பதையும் இதனால்தான் நாம் உனக்கு அடிக்கடி ஞாபகப்படுத்திக் கொண்டிருக்கிறோம். அதாவது நபிக்கு மரியாதை செய்யும்விடயத்தை நம்புவது எங்கையாவது உன் உள்ளத்திலிருந்துவெளியாக்கப்படாமலிருக்கவும், நீ நாசமாகிப் போகாமலிருக்கவுமே இவ்விதமாய் பல முறை கூறியுள்ளான்.

தொடர்ந்து குர்ஆன் நபிக்கு மரியாதை செய்யும் விடயத்தை இரண்டாவதாக விபரிக்கையில் இம்முறையில் முக்கியத்துவம் கொடுதுதுள்ளது. சூரத் அல் ஹஜ்ர் இன்னும் சூறத் அல் ஸாத்யிலும் அல்லாஹ்வின் கூற்றாகிறது.

فسجد الملئكة كلهم اجمعون

பொருள்:-

எனவே எல்லா அமரர்களும் ஒன்று சேர்ந்தவர்களாய் ஒரே நேரத்தில் சுஜூது செய்தார்கள் (14 :3) (23.14)

"மலாயிகா" எனும் பதம் "மலக்" என்பதன் பன்மைச் சொல்லாகும். ஆனால் குர்ஆன் இதனைக் கொண்டு போதுமாக்கிக் கொள்ளவில்லை. மாறாக (குல்லுகும்) மேலும் **(அஜ்மஊன்)** எனும் பதங்களைக் கொண்டு அவ்விடயத்தை உறுதிப்படுத்தியுள்ளது. இங்கு **(மலாயிகா)** என்ற சொல் மாத்திரம் இருந்திருந்தால் ஹஸ்ரத் ஆதம் (அலை) அவர்களுக்கு ஒரே ஒரு அமரர் மாத்திரமே சுஜூது செய்தார் என்று கூறமுடியும் ஏனெனில் திருக்குர்ஆனில் பல இடத்தில் **(மலாயிகா)** எனும் பதத்தைக்கொண்டு ஓர் அமரரை கருத்தில் கொள்ளப் பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. இதற்கு ஆதாரமாக இறை வாக்கியமாகிறது.

فنادته الملئكة(اى جبريل) وهوقائم يصلي في المحراب

**பொருள்:-**

மலாயிகா (ஜிப்ரீல் அலை) அவருமோ மிஹ்ராபில் தொழுது கெண்டிருக்கும் சமயத்தில் அழைத்தார்(12.3) மேலும் அவனது வாக்காகிறது

واذقالت الملئكة(اى جبريل) يمريم ان الله اصطفاك

**பொருள்:-**

நிச்சயமாக அல்லாஹ் உங்களைத் தேர்ந்தெடுத்துள்ளான் எனமலாயிகா **"ஜிப்ரீல்"** மர்யம் (அலை) அவர்களை நோக்கிக் கூறிய சமயத்தில்.

இந்த இறை வசனங்களில் "மலாயிகா" எனும் சொல்லைக் கொண்டு ஒரே ஒரு அமரர் என்பதன் பொருள் நாட்டமாகும். இவ்விதம் சஜ்தா உடைய விளக்கத்திலும் "மலாயிகா" என்பதன் நாட்டம் ஓர் மலக் என்பது முடியுமானதாகும். இதே போல் "மலாயிகா" எனும் சொல் பொதுவானதாயிருப்பதால் நபி ஆதம் (அலை) அவர்களுக்கு சில அமர்கள் சுஜூதுசெய்திருக்கலாம் என்றும் கூறமுடியும். எனவே இப்படியானசந்தேகங்களின் வாயில்களை மூடும் நோக்குடன் **"மலாயிகா"**பதத்துடன் **"குல்லுகும்"** அதாவது ஓர் மலக் அல்லது சில அமர்ரர்களும் சஜ்தா செய்யவில்லை. மாறாக அனைத்து அமரர்களும் சுஜூதுசெய்தார்கள் எனும் பதத்தையும், பின்னர் மற்றுமோர் சந்தேகம்அதாவது:- எல்லோரும் ஒன்றாக ஒரே நேரத்தில் சஜ்தாசெய்தார்களா? அல்லது பிரிவு, பிரிவினர்களாகவா? எனும் சந்தேகத்தை நீக்கும் முகமாக **"குல்லுகும்"** எனும் சொல்லுடன் **"அஜ்மஊன்"** என்பதையும் சேர்த்துக் கூறியுள்ளான். சிலரோ அல்லது பிரிவு பிரிவாகவோ சஜ்தா செய்வது தஃழீம் சம்பூரணமரியாதை அல்ல என்பதற்காகவே அனைத்து அமர்களும் ஒரேநேரத்தில் அச் செயலைப் புரிந்தார்கள்.



# மரியாதைக்கான பல விதமுறை

எழுந்து நிற்பது மாத்திரமல்ல மரியாதை என்றாலும் மரியாதை செய்வதற்கு பலமுறைகள் உள்ளன. அல்லாஹ்தஆலா குர்ஆனில் பின்வருமாறு கூறுகின்றான்.

واستعينوا باصبر والصلاة

**பொருள்:-**

பொறுமையைக் கொண்டும், தொழுகையைக் கொண்டும் உதவிதேடுங்கள்.

பொறுமை மூன்று வகைப்படும். அவை 1) முஸீபத் மீது பொருமை செய்தல் 2) அல்லாஹ்வுக்கு வழிப்பட்டு அதில் நிலை கொண்டு எக்காலமும் பொறுமை செய்தல், 3) பாவங்கள் புரியாது இருப்தன்மீது பொறுமை செய்தல் (தப்ஸீர் ஸாவி)

அல்லாஹ்வுக்கு வழிப்படுவதன் மீது ஓர் செயலை தொடராக எக்காலமும் புரிவது பொறுமை **"ஸப்ர்"** என்றால், தொழுகையும் அதனுல் அடங்கிடும். அப்படியிருந்தும் அல்லாஹ் மேற்கூறிய வசனத்தில் **"ஸப்ர்"** என்பதன் பின்னால் தொழுகையைக் கூறிய காரணம் என்ன? என்ற கேள்வி எழும்பியுள்ளது. இதற்கு பதிலாக அல்லாமா ஜலாலுத்தின் சுயுதி ؓ அவர்கள் தப்ஸீர் ஜலாலைனில் **"ஸலாத்"** தொழகை என்பதற்கு விரிவுரை செய்கையில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

افردها بالذكر تعظيما لشأنها

தொழுகைகைய தனிப்பட்ட முறையில் எடுத்துக் கூறியது அதன்மகத்துவத்திற்கு மரியாதை தஃழீம் செய்வதற்காகவே!

அதாவது "ஸப்ர்" பொறுமையின் ஓர் பிரிவாக் தொழுகை அதில்பொதிந்திருந்தும் தனிப்பட்ட முறையில் அதை எடுத்துக் கூறியது அதனை கண்ணியப்படுத்தி கௌரவப்படுத்தவே!

அல்லாமா சுயூதி ؓ அவர்களின் இந்த பதில் மூலமாக. அதாவது பொதுப்படையான ஒன்றினுள் அடங்கியிருந்தும் ஏதாவதுஒன்றைக் குறிப்பாக தனிப்பட கூறுவதும் அதற்குக் கொடுக்கும்மரியாதை கௌரவமாகவும் என்பது தெரியவந்தது.உதாரணமாக விருந்துக்கான அழைப்பு எல்லோருக்கும், மேலும் "முப்தி" அவர்களுக்கும் கொடுப்பது. எனவே முப்தி என்பரும்எல்லோருக்கும் என்ற சொல்லில் உட்பட்டவர் தான் என்றாலும்பின்னர் தனிப்பட அவரைக் கூறியது அவருக்குப் புரியும் தஃழீமாகும்.

தொடர்ந்து அல்குர்ஆன் பின்வருமாறு கூறுகின்றது:

ياايهاالذين آمنوادخلوافي السلم كافة

என்ற இறை வாக்கியம் இறங்கியதன் காரணத்தை கூறுகையில் அல்லாமா சுயூதி(ரஹ்) கூறுகிறார்கள்.

نزل في عبدا لله بن سلام واصحابه لما عظموا السبت

இந்த இறை வசனம் அப்துல்லாஹ் பின் சலாம் மேலும் அவர்களதுதோழர்களின் விடயத்தில் "சனிக்கிழமையை" கண்ணியப் படுத்தியபோது இறங்கியது. அதாவது அப்துல்லாஹ் பின் சலாம்(ரலி) அவர்களும் தோழர்களும் அரம்பத்தில் யஹூதிகளாயிருந்தார் கள். முஸ்லீம்களான பின்பும் அவர்கள் சனிக்கிழமைக்கு மதிப்புக் கொடுக்கும் முகமாக அத்தினம் வேட்டையாடச் செல்வதை ஹராம் என கருதுவோராயிருந்தார்கள்.

தொடர்ந்து ஹஸ்ரத் மூஸா (அலை) அவர்களும், சூனியக்காரர் களும் மேடைக்குச் சமுகம் கொடுத்த போது நபி மூஸா (அலை) அவர்களை நோக்கிக் கேட்டார்கள்.

اما ان تلقي واما ان تكون نحن الملقين

**பொருள்:-**

நீங்கள் ஆரம்பிக்கின்றீர்களா? அல்லது நாம் ஆரம்பிக்கட்டுமா? (4:9)

இங்கே சூனியக்காரர்கள் ஹஸ்ரத் மூஸா(அலை) அவர்களைப் பார்த்து இவ்விதம் கேட்டதும் அவர்களுக்கு செய்யும் தஃழீமாகும். அவர்கள் நபிக்கு இவ்விதமாக தஃழீம் செய்த காரணத்தால் ஈமான் கொள்ளும் பாக்கியம் பெற்றனர். இவ்வசனத்திற்குக் கீழே

قد جازاهم ا لله علي هذاالادب حيث من عليهم بالايمان

அல்லாஹுதஆலா அந்த மரியாதையின் காரணத்தால் ஈமான் கொண்டு நல்லோர் கூட்டத்தில் சேர உதவி புரிந்தான் (தப்ஸீர்ஸாவி, தப்ஸீர் ஜமல்)



மேலும் தப்ஸீர் ஸாவியில்

ذلك تأدبا من السحرة مع موسى وقد

جوزواعليه بالايمان والنجاة من النار

அது நபி மூஸா (அலை) அவர்களுக்கு சூனியக்காரர்கள் செய்த மரியாதையாகும். இதனால் அல்லாஹ் அவர்களுக்கு நன்கொடையாக ஈமான் கொண்டு நரக நெருப்பிலிருந்து ஈடேற்றம் பெறச் செய்தான். மௌலானா றூமி (ரஹ்) அவர்கள்தனது மஸ்னவீ ஷரீபில் குறிப் பிட்டுள்ளார்கள்.

زیں قدر تعظیم دیں شاں را خرید

وز مرے آں دست و پا ہا شاں برید

இம்மேற் கூறப்பட்ட ஆதாரங்களிலிருந்து இரண்டு விடயங்கள் தெளிவாகிறது:-

1) சூனியக்காரர்கள் தனது வித்தைகளைக் காண்பிப்பதற்கு முன்னர்ஹஸ்ரத் மூஸா (அலை) அவர்களை நோக்கி கேள்வி கேட்டதும்,2) நபிக்கு மரியாதை செய்வதால் ஈமான் பறிபோய் விடமாட்டாது. மாறாக அதன் பறக்கத்தால் ஈமான் உள்ளவனாக மாறுவதற்கு சந்தர்ப்பம் கிடைக்கின்றது. மேலும் ஈமான் உள்ளவனாக இருப்பின் அவனது ஈமான் ஒளிபெறுகின்றது என்பது தெளிவானது. இதேபோல் மார்க்க சட்ட நிபுணர்கள் பள்ளிவாயில்களை அலங்கரிப்பது அதற்கு கொடுக்கும் கண்ணியம் தஃழீம் எனக் கூறியுள்ளார்கள் இவ்விடங் களை மேலும் விரிவாக அறிய விரும்பின் "ஷாமியின்" முதலாம் பாகம், நாநூற்றி நாற்பத்திரண்டாம்பக்கத்தைப் பார்த்துக் கொள்.

மேலும் மையித் குளிப்பாட்டப்படும் பலகையின் கீழ் சாம்புறானிபுகையிடும் காரணத்தை விளக்குகையில் ஷெய்க் புர்ஹானுத்தின்அபூ அல்ஹசன் அல் முர்கினானி(ரஹ்)அவர்கள் ஹிதாயா பாகம் 1, பக்கம் 158 யில்

لما فيه من تعظيم الميت

மணப் பொருட்களை வைப்பது மையித்துக்கு புரியும் கண்ணியமாகும் எனக் குறிப்பிட்டுள்ளார்.

எனவே இறை இல்லங்களை அழகுபடுத்தி உயிர்பிக்கச் செய்வதையும், மையித் குளிப்பாட்டப்படுமிடத்தில் சாம்புறானி

போன்ற வாசனத்திரவியங்களை உபயோகிப்பதையும் புகஹாக்கள் அவைகளுக்குப் புரியும் தஃழீம் எனக் கருதி முஸ்தஹப்பு எனக் கூறியுள்ளார்கள்.

ஆகவே குர்ஆன், தப்ஸீர், பிக்ஹ் போன்றவைகளின் மூலமாக எவருக்காவது கண்ணியம் தஃழீம் செய்ய எழுந்து நிற்பதுமாத்திரம் தான் என்பதல். மாறாக அதற்கு கணக்கிட முடியாமுறைகள் உள்ளன என்பதும், சொல்லால் அல்லது செயலால் எவ்விதத்திலும் எவருக் காவது மரியாதை செய்யப்படுமானால் அவ்வனைத்தும் அவருக்குப் புரியும் (தஃழீம்) கௌரவமே என்பதுதெளிவாகிட்டது.

இதுமாத்திரமன்றி ஒரு முக்கிய பெரிய மனிதரின் வருகைக்காக புகையிரதம் செல்லல், அவர் மீது பூமாலை சூடுதல், வாழ்க!வாழ்க! எனக் கோஷமிடுதல், பாதைகளை கொடிகள் கட்டிசோடினை செய்தல், மேலும் திறப்பு விழாக்களை அமைத்தல் இவையாவும் வருபவருக்குச் செய்யும் தஃழீம் மரியாதை எனலாம். இதைப் போன்றே தம்து விருந்தாளிக்காக மிக உயர்ந்தபெறுமதிமிக்க விரிப்புக்கள் விரிப்பதும், உயர் ஆசனங்களை அமைப்பதும், ஆடம்பரமான உணவு களை தயார் செய்வதும் விருந்தினருக்குச் செய்யும் கண்ணியமாகும். எதுவரை என்றால்முக்கிய பெரிய மனிதருக்கு முன்னால் பீடி, சிகரெட் புகைக்காமலிருப்பதும், இப்படிப்பட்ட செயற்களுங் கூட அந்தமுக்கிய பெரிய மனிதருக்குப் புரியும் மரியாதையை வெளிப்படுத்துவதாகக் கருதப்படும். இவைகளில் ஒன்றையேனும் இக்கேடுகெட்ட கூட்டத் தாரின் மடையர்களான உலமாக்கள் **“ஷிர்க்”** என்றோ, **“ஹராம்”** என்றோ கூறியது இல்லை. ஆனால் இறைவனது காதலர்எங்கள் தலைவர் **“மழ்ஹரே அதம்”** முஹம்மது முஸ்தபா அஹ்மதுமுஜ்தபா ﷺ அவர்களுக்கு தஃழீம் செய்யும் முகமாக எழுந்துநின்றால், அல்லது மீலாத் மேடைகளை அமைத்தால் இந்த நாசம் பிடித்தோர்களின் கண்களில் நெருப்புக் குபாயம் எழுந்திடுகின்றது. மேலும் ஷிர்க், குப்ர், ஹராம், எனும் மழையைப் பொழிய ஆரம்பித்திடுகின்றனர். இப்படியானோர் மீது இறை சாபம்,சாபம், சாபம்.

بریں دین ودانش بباید گریست



## குர்ஆனும், திரு நபி (ஸல்) அவர்களின் மரியாதையும்

*(1) அல்லாஹுதஆலா தன் திருமறையில்*

انارسلناك شاهداومبشراونذيرا لتؤمنوابا

لله ورسوله وتعزروه وتوقروه وتسبحوه

بكرة واصيلا

**பொருள்:-**

*நபியே! நிச்சயமாக நாம் உங்களை எவ்விடத்திற்கும் சமுகம் கொடுப்போரோகவும், முஃமினீன்களுக்கு சுபச் செய்தி சொல்வோரா கவும், முனாபிகீன்களுக்கும் காபிர்களுக்கும் அச்சமூட்டி எச்செரிக்கை செய்வோராகவும் அனுப்பியுள்ளோம். எதற்காக அல்லாஹ்வைக் கொண்டும் அவனது தூதரைக்கொண்டும் ஈமான் கொள்வதற்காகவே! இன்னும் அந்த நபிக்கு மரியாதை செய்யுங்கள். அம்மகானை கௌரப்படுத்துங்கள். மேலும் காலையிலும், மாலையிலும் அவனை துதி செய்யுங்கள் (26: 9)*

ஹஸ்ரத் காழி இயாழ் رحمة الله عليه அவர்கள் ஷிபாஃ ஷரீப் பாகம் இரண்டில், பக்கம் இருபத்தெட்டில்

فاوجب الله تعالى تعزيره وتوقيره والزم اكرامه وتعظيمه

அல்லாஹுதஆலா நபி முஹம்மத் ﷺ அவர்களுக்கு மரியாதை செய்வதை கடமையாக்கியுள்ளான். மேலும் அவர்களை கண்ணியப் படுத்துவதையும், கௌரவிப்பதையும் அவசியம் என கட்டளை பிரப்பித்துள்ளான்.

எனவே இந்த இறை வசனத்தில் திரு நபி ﷺ அவர்களுக்கு மரியாதை, கண்ணியம், கௌரவம் செய்யுமாறு இடப்பட்டகட்டளை வாஜிபு லாசிமானதாகும். மேலும் இச்சட்டம் பொதுப்படையானது என்பதற்காக சகல முஸ்லீம்களும் ஆகுமான எல்லா முறைகளிலும் நேரம் குறிப்பிடப்படாது தஃழீம் மரியாதை செய்வது கடமையாகும். நபிகளார் ﷺ அவர்களுக்கு மரியாதை தஃழீம் செய்வதற்கு குறிப்பாக எந்த தனிப்பட்ட முறையுமில்லை,நேரம் குறிப்பிட்ட ஒன்றும் அல்ல. எனவே எல்லா விதத்திலும்,எந்நேரத்திலும் அவர்களுக்கு தஃழீம் செய்வது கடமையாகும்.ஆனால் அவர்கள்தான் அல்லாஹ் என்றோ, அல்லது அல்லாஹ்வின்பிள்ளை என்றோ, அல்லது அவர்களுக்கு

உள்ள உயர் தன்மைகளைதாதிய்யத்தானது. எனக்கூறுவதோ கூடாத விலக்கப்பட்டஒன்றாகும்.

மேற்கூறிய இறை வசனத்தை இன்னும் சற்று சிந்தித்துப்பார் போமாகில் அவ்வசனம் முதலில் ஈமானைப் பற்றியும் பின்னர் நபி ﷺ அவர்களுக்குக் கொடுக்கும் மரியாதை, சங்கையைப் பற்றியும் அதன் பின்னர் இறைவனை துதி செய்தலையும் எடுத்தியம்புகின்றது. இவ்வசனத்தின் உண்மைத் தத்துவம் யாதனப் பார்க்கையில் ஈமான்யாவற்றையும் விட முற்பட்ட விசயம். எனவே ஈமான் கொள்ளாது நபிக்கு மரியாதை செய்யமுடியாது. மேலும் நபிக்கு மரியாதை தஃழீம் செய்யாது தொழுகை, நோன்பு, ஸகாத், ஹஜ், தானதருமம், இவை போன்ற அனைத்து வணக்கங்களும் நன்மையான காரியங்களையும் செய்வது வரவற்ற செலவு போன்ற வீனான காரியமாகும் என்று தெரியவருகின்றது.

ومن يعظم شعائرا لله فانها من تقوى القلوب

**(2) பொருள்:-**

எவர் அல்லாஹ்வின் சின்னங்களுக்கு தஃழீம் மரியாதை செய்கின்றாரோ நிச்சயமாக அவர் அல்லாஹ்வைப்பயந்தவராவார் *(17:11)*

இந்த வசனத்தின் மூலமாக எவனது உள்ளத்தில் இறை அச்சம் உள்ளதோ அவனே இறை சின்னங்களை கண்ணியப்படுத்துவான் என்பது தெட்டத்தெளிவாகின்றது. ஷஆயிர் என்பது மார்க்கஞாபகச் சின்னங்களாகும் (தப்ஸீர் ஜலாலைன் பக்கம் 23)

எம் தலைவர் ஷபீஉல் முத்னிபீன் ﷺ அவர்கள் மார்க்க ஞாபக சின்னங்களில் வலுப்பமிக்க உயர் சின்னமாகும். எனவே அவர்கள் அனைத்து சின்னங்களையும் பார்க்க எல்லாவற்றையும் விட அதிகமரியாதைக்கும், கௌரவத்திற்கும் தகுதி பெற்றவர்களாவார்கள். மேலும் நாம் இந்த ஆயத்தின் மூலமாகப் பெறும் மிகப்பெரிய படிப்பினை யாதெனில் அதாவது:- எவர்கள் திருநபி ﷺ அவர்களுக்கு தஃழீம் மரியாதை செய்வதை நிராகரிக்கின்றார்களோ அவர்கள் பார்ப்பதற்கு அதிக வணக்கம் புரிவோராகஇருந்தாலும், தாடி வைத்தல், ஜுப்பா அணிதல், மிஸ்வாக்செய்தல், தலைமுடிகளை சிரைத்தல் இவை போன்ற ஓர் சில நபிவழிகளை பின்பற்றுவோராக தென்பட்டாலும், அவர்களின் உள்ளம் "தக்வா" எனும் உள்ளச்சை விட்டும் நீங்கியதாகவே இருக்கும்என்பதை நன்நாய் உணர்ந்து கொள். மேலும் இப்படியானோர்களின் வெளித்தோற்றத்தைக் கண்டு நீயும் மயங்கிடாதே! ஆட்டுக்கும் தாடி உண்டு. எனவே இவர்களின் தோற்றத்தைக்கண்டு பத்வா மார்கத் திர்ப்பு கேட்டிடாதே!



ومن يعظم حرمات ا لله فهوخيرله عند ربه

**(3) பொருள்:-**

மேலும் எவர் அல்லாஹ்வின் சங்கை மிகு பொருட்களுக்கு தஃழீம் மரியாதை செய்கிறாரோ அச்செயல் அவனதுரப்பிடத்தில் நன்மை தரும் செயலாகும் *(17:11)*

"ஹுருமாதில்லாஹ்" என்பதன் பொருள்:- எப்பொருட்கள் அல்லாஹ்விடத்தில் சங்கை மதிப்புப் பெற்றதோ அப்பொருட்களாகும். கருனைக் கடல் முஹம்மத் ﷺ அவர்களைவிட அல்லாஹ்விடத்தில் மிக மதிப்புப் பெற்ற பொருள் இருக்கின்றதா சகோதரா? எனவே நபி ﷺ அவர்களுக்கு தஃழீம் செய்வதால்ஷிர்க் உண்டாகுமா? இதற்கான பதிலை நீயே திர்மானித்துக்கொள்.

ياايها الذين آمنوا لا تقدموا بين يدى
ا لله ورسوله ان ا لله سميع عليم

**(4) பொருள்:-**

ஈமான் கொன்டோரே! எவ்வேலையிலும் அல்லாஹ்,அவனது ரசூலைக்கான முந்திச் சென்றிடாதே! இன்னும் அல்லாஹ்வை பயந்து கொள். நிச்சயமாக அல்லாஹ்யாவற்றையும் கேட்போனாகவும், அறிந்தவனாகவும்இருக்கின்றான்.

ياايها الذين آمنوا لاترفعوا اصواتكم فوق
صوت النبي ولا تجهروا له بالقول كجهر
بعضكم لبعض ان تحبط اعمالكم وانتم
لاتشعرون

**(5) பொருள்:-**

முஃமினீன்களே! உங்கள் தொனிகளை நபி ﷺ அவர்களின் சப்தத்தை விட உயர்த்திடாதிர்கள். மேலும் நீங்கள் உங்கள் மத்தியில் சன்டை சச்சரவு செய்வது போன்றும் அவர் முன்னிலையில் செய்திட வேண்டாம். அவ்வாறு செய்வீர்களானால் நீங்கள் அறியாதிருக்க உங்கள் வணக்கங்கள் வீனானதாகிவிடும் *(26:13)*

அல்லாஹ்தஆலா இந்த சிறப்புமிகு வசனங்களில் தனது காதலரானநபியே கரீம் ﷺ அவர்களுக்கு எவ்விதமாய் மரியாதை சங்கை தஃழீம் செய்ய வேண்டும் என்பதை விளக்கியுள்ளான்

என்பதைப்பாருங்கள். எனவே முஸ்லீம்கள் மீது இச்செயல் கட்டாய அவசியமான ஒன்றாகும். அதற்கென மூன்று முறைகள் உள்ளன. சொல், செயல் இரண்டால் எவ்விதத்திலும் நபியைமுந்தாதிரத்தல், தனது சப்தத்தை நபியின் சப்தத்தை விடஉயர்த்தாது தாழ்மையாக பேசுதல். எங்கள் மத்தில் ஒருவர்மற்றவருடன் சன்டை சச்சரவு செய்வது போன்று செய்யாதிருத்தல் போன்றவைகளாகும். இந்த சட்டங்களுக்கு நீங்கள் மாறுசெய்வீர்களானால், அல்லது நபி ﷺ அவர்களை சிறிதளவேனும் தரக்குறைச்சலாகப் பேசுவீர்களானால், எண்ணம் கொள்வீரர்களானால், முஸ்லீம்களே! உங்கள் வணக்கங்கள் யாவும் வீணாக்கப்பட்டதாய்விடும். அதாவது நீங்கள் உங்களை ஈமான் உடையவர்கள் என்றே நினைத்துக் கொண்டிருப்பீர்கள்.

அல்லாஹுதஆலா இவ் ஆயத்துக்களில் நபியே கரீம் ﷺ அவர்களுக்கு மரியாதை செய்யும் அம்ஷத்தை விபரிப்பதற்காக ஈமான் உடையோரே! என முஃமினீன்களை விழித்துக் கூறியுள்ளான். எதற்காக ஈமான் உள்ள ஒருவன்தான் நபிக்கு தஃழீம் செய்வதை ஏற்றுக்கொள்வான் என்பதற்காகவே! மேலும் ஈமான் உள்ள ஒருவன் தான் இவ்விடயங்களை படிப்பதற்கும் தகுதி பெற்றவன். எவனிடம் ஈமான் இல்லையோ அவனுக்கு தஃழீமுக்கான விதத்தை விபரிப்பது அர்தமற்ற செயலாகும். அவன் அச்சொல்லை உபயோகிப்பவனாகவே இல்லை. எப்படி என்றால் முஸ்லிம் அல்லாத ஓர் காபிருக்கு தொழுகையின் விதத்தைக் கற்றுக் கொடுப்பது பிரயோசனமற்ற செயலாகும். அவனோ தொழுகையை ஏற்பவனாகவே இல்லையே!

ياايهاالذين آمنوالاتجعلوادعاء الرسول بينكم كدعاء
بعضكم بعضا

**(6) பொருள்:-**

உங்கள் மத்தியில் ஒருவர் மற்றவரை அழைப்பது போல் நபியே கரீம் ﷺ அவர்களை அழைக்காதிர்கள் *(18:15)*

இந்த ஆயத்திலும் நபி அக்ரம் ﷺ அவர்களுக்கு எவ்விதம் தஃழீம் மரியாதை செய்ய வேண்டும் என்பதைப் படித்துக்கொடுக்கப் படுகின்றது. எவ்விதம் நீங்கள் உங்கள் மத்தியில் பெயர் கொண்டு அழைப்பது போல் எனது ஹபீப் திரு நபி ﷺ அவர்களை அழைக்க வேண்டாம்.



ஹஸ்ரத் அபூ மக்கி மாலிகி ؓ அவர்கள் ஷிபா ஷரீபில் பாகம் இரண்டு பக்கம் இருபத்தெட்டில்

لاتنادوه باسمه نداء بعضكم بعضاولكن
عظموه ووقروه ونادوه باشرف ما يحب
ما يحب ينادى به يا نبي ا لله يارسول ا لله

**(7) பொருள்.-**

உங்களில் சிலர் சிலரை பெயர் கொண்டு அழைப்பது போல் அம்மகானை அவர் பெயர் கொண்டு அழைக்காதிர்கள்.என்றாலும் அவர்களுக்கு கண்ணியம் மரியாதை செய்யுங்கள்.மேலும் அவர்களை சிறப்பு மிக்க சொற்களைக் கொண்டுஅழையுங்கள். யா நபிய் யல்லாஹ், யா ரசூலல்லாஹ் போன்ற அழகு திரு நாமங்கள் கொண்டு அழையுங்கள். எனக் குறிப்பிட்டுள்ளார்கள்.

இமாம் ஹஸ்ரத் அஹ்மத் ஷிஹாபுத்தின் குப்பாஜீ ؓ அவர்கள் "நஸீம் அல்ரியாழ் பாகம் மூன்று. பக்கம் 286யில்"

قدنهى ا لله تعالى عن الامورالتي تقتضي
اهانته فكانه امربتعظيمه وتوقيره

**(8) பொருள்:-**

எவ்விடயங்களைப் புரிவதனால், எப்பேச்சுக்களைப் பேசுவதனால் அந்த நபியே கரீம் ﷺ அவர்களுக்கு தரக்குறைவு உண்டாகின்றதோ அவைகளிலிருந்து அல்லாஹ் தடுததுள்ளான். எனவே அவன் அவர்களுக்கு கண்ணியம், மரியாதை புரியுமாறு "ஹுக்ம்" கட்டளையிட்டுள்ளான்.

ياايهاالذين آمنوالاتقولوا راعنا وقولوا
انظرنا

**(9) பொருள்:-**

ஈமான் கொண்டோரே! நீங்கள் "றாயினா" எனக் **கூறாதாதிர்கள். உன்ழுர்னா எனக் கூறுங்கள்.***(1:13)*

ஈருலகத் தலைவர் நபிகட்கரசர் ﷺ அவர்கள் எப்போதும் ஏதாவது எடுத்தியம்பிக் கொண்டிருக்கையில் அப்பொன் மொழிகளில் ஏதும் ஸஹாபாக்களுக்கு புரிய வில்லையின் "றாயினா யா ரசூலல்லாஹ்" (யா ரசூலல்லாஹ் எங்களைக்கவனியுங்கள்) அதாவது அச்சொல்லை இரண்டாம் தடவையாகமொழியுங்கள் எனக் கூறுவதற்க்கு இச்சொல்லை உபயோகிக்கும் வழக்கம் உடையோராக இருந்தார்கள். ஆனால் இச்சொல் யஹுூதிகளிடத்தில் இழிவான ஒர் சொல்லாக இருந்தது. காரணம் றாயினா என்பது ஆடு, மாடு, ஒட்டகம் போன்றஉயிர் பிராணிகளை மேய்த்தளத்தில் கண்கானிக்கும் இடையனுக்கு குறிப்பாகும். இதனால் அந்தக் காபிரர்கள் நபியே கரீம் ﷺ அவர்களை தரக்குறைச்சல் செய்யும் நோக்குடன் இச் சொல்லை உபயோகிக்க ஆரம்பித்தார்கள். இவ்விதமாக இவர்கள் கெட்ட எண்ணத்துடன் இச் சொல்லை உபயோகிக்க ஆரம்பித்தும்அல்லாஹ் மேல் கூறிய வசனத்தை இறக்கினான். முஃமினீன்களே! நீங்கள் "றாயினா" எனும் சொல்லை உபயோகிப்பதற்கு பதிலாக "உன்ழுர்னா" எனக் கூறுங்கள் எனக் கட்டளை பிரப்பித்தான். இச்சொல்லை நீங்கள் உபயோகம் செய்வதில் உங்கள் எண்ணம்சரியாக இருப்பினும் சரியே! என்றாலும் யஹுூதிகளுக்கு இச்சொல்லைக் கொண்டு தன் தோழரைத் தரக்குறைச்சல் செய்யசந்தர்பம் கிடைக்கின்றது. இதனால் நீங்களும் அதை உபயோகம்செய்யாதிர்கள் என்பதாகும்.

ஹஸ்ரத் காழி இயாழ் ﵀ அவர்கள் ஷிபாஃ ஷரீபில் பாகம் இரண்டு, பக்கம் இருபத்தொம்பதில்

نهواعن قولها تعظيما للنبي صلى ا الله تعالى عليه وسلم وتبجيلا له

பொருள்:-

நபி அக்ரம் ﷺ அவர்களுக்கு மரியாதை தஃழீம் கௌரவம் செய்யும் முகமாகவே ஸஹாபாக்கள் றாயினா எனும் சொல்லை உபயோகிப்பதை விட்டும் தடுக்கப்பட்டார்கள்.



## ஸஹாபாக்களும், நபியின் தஃழீமும்

எழுந்து நிற்பது இப்படியான மரியாதையாகும். எப்படி அது மிகப்படித்தரம் குறைந்ததாக இருந்தும் பெரும் பாலானோர் ஒர் சாதாரன மனிதனுக்கு எழுந்து நின்று மரியாதை செய்கின்றார்கள். ஆனால் மாறுபுரிவோர்கள் இந்தப் படித்தரம் குறைந்த ஒன்றைக் கொண்டு ஈருலக இரட்சகர் ﷺ அவர்களுக்கு மரியாதை செய்வதை கூடாத அம்ஷம் என ஒப்பாரியிடுகின்றர். ஸஹாபாயேகிராம் எப்போதும் நபிகள் கோமான் ﷺ அவர்களது திருச்சபையில் என்னேரமும் வீற்றிருந்தனர், மார்க்கம் எதுவென்று நன்றாய் அறிந்திருந்தார்கள். மேலும் ஹலால், ஹராம்போன்றவைகளை நன்கறிந்திருந்தும், அவர்கள் நபியே கரீம் ﷺ அவர்களுக்கு பின்வரும் முறைகளிலெல்லாம் தஃழீம்செய்வோராயிருந்தார்கள் அவர்கள் புரிந்த மரியாதை போன்றமரியாதை இன்று கான்பது அற்பத்திலும் அற்பமே!

1) ஹதிது ஷரீபில் உர்வா பின் மஸ்ஊத் ﵁ அவர்கள் புனித இஸ்லாத்தை ஏற்றுக் கொள்வதற்கு முன்னர் ஹுதைபியா எனும் இடத்தில் நபிகளார் ﷺ அவர்களுடன் இனக்க சமாதானப் பேச்சுக்காக வந்திருந்தார்கள். அந்த இடத்தில் ஸஹாபாக்கள் நபிகளார் ﷺ அவர்களுக்கு செய்த மரியாதையைக் கண்ணுற்று ஆச்சரியமடைந்தவர்களாய் தனது கூட்டத்தாரைச் சென்றடைந்ததும் கண்டவற்றை பின்வரும் சொற்ற டொர்களைக் கொண்டு விளக்கம் செய்கிறார்கள்.

وا لله لقد وفدت على الملوك وفدت على قيصرو كسرى والنجاشي وا لله انْ رأيت ملكا قط يعظمه اصحابه ما يعظم اصحاب محمدمحمداوا لله ان تنخم نخامة الاوقعت في كف رجل منهم فدلك بها وجهه وجلده واذا امرهم ابتدروا امره واذاتوضأ كادوا يقتتلون على وضوئه واذاتكلم خفضوا اصواتهم عنده وما يحدون اليه النظر تعظيما له(بخاري شريف ج١ص٣٧٩)

பொருள் :-

அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் மன்னர்களின் அரங்கங்களுக்கும், "கைசர்", "கிஸ்றா" "நஜ்ஜாஷீ" போன்றோர்களின் மாளிகைகளுக்கும் விருந்தினராகச் சமுகம் கொடுத்திருக்கின்றேன். அல்லாஹ்வின் மீது சத்தியமாக எவ்விதம் முஹம்மத் ﷺ அவர்களுடைய தோழர்கள் அந்த நாயகத்திற்கு

மரியாதைகண்ணியம் செய்கின்றார்களோ! இவ்விதமாய் எந்த மன்னரையும்அவரின் தோழர்கள் மன்னருக்குப் புரியக் கானவே இல்லை!அல்லாஹ்வின் மீது ஆனையாக! அவர் துப்பு வாரானால் அந்ததோழர்களில் நின்றும் எவராவதுடைய கரங்களில் வீழ்ந்தேஅன்றியும், மேலும் அதைக் கொண்டு தன் வதனங்களிலும், ஏனைய உறுப்புகளிலும் பூசுவோர் களாக இருக்கக் கண்டேன். மேலும் அவர் எதற்கேனும் கட்டளை பிரப்பிப்பாரானால், அக்கட்டளையை உடனே அமுல்படுத்துவோராகவும், மேலும் அவர் வுழுச் செய்வாரானால் அவர்களின் உறுப்புகளிலிந்து விழும்தண்ணீர் தன் கரத்தில் விழவேண்டும் என்பதற்காக ஒருவர்மற்றவரைப் பார்க்காது தன் உயிர் பிரிந்தாலும் அதைப் பெற்றுத்தான் ஆகவேண்டும் எனும் ஆசை கொண்டோர்களாகவும், மேலும் அத்திருச் சபையில் பேசும் சமயத்தில் மிகத் தாழ்மையாக உரையாடுவதையும், அம்மகானுக்கு மதிப்பு கண்ணியம் செய்யும்முகமாக கண்கூர்ந்து பார்க்காது இருப்பதையும் கண்ணுற்றேன் எனக் கூறினார்கள். (புகாரி ஷரீப், பாகம்1, பக்கம் 379)

இந்த ஹதீதிலிருந்து நாம் பெறும் படிப்பினை யாதெனில்: நேர்வழி காட்டுவதற்காக இலங்கிக் கொண்டிருக்கும் நட்சத்திரங்களான ஸஹாபாக்கள் சகல விதத்திலும் திரு நபி ﷺ அவர்களுக்கு முடிவற்ற நிலையில் மரியாதை தஃழீம் செய்திருக்கிறார்கள். எந்தளவு என்றால் அவர்களின் உமிழ்நீரோ! துப்பலோ கீழே விழ அனுமதிக்காது தங்களது கரங்களில் விழச் செய்து அதை தன் உடம்புகளில், முகங்களில் தேய்த்துக் கொள்வோர்களாகவும் மேலும் வுழூச் செய்த தண்ணீரை பெறுவதற்காக தன் உயிரைக் கூட அற்பமாக கருதுவோராகவும் இருந்தார்கள் என்பது தெரியவந்தது.

மன வேதனக்குரிய விடயம் யாதெனில் இன்று முஸ்லீம்கள் என்றபெயரில் இருந்து கொண்டு அந்தக் கண்மனி நாயகம் ﷺ அவர்களுக்கு மரியாதை, கண்ணியம் செய்யும் முகமாக எழுந்து நிற்பதற்குக் கூட தயாரில்லை. மேலும் அவர்கள் தாங்கள் ஸஹாபாக்களின் பாதையில் செல்வோர் என்றும், நாங்கள் உண்மையான தௌஹீதியர்கள் என்றும் கோஷமிடுவோராகவும் இருக்கின்றனர். யா அல்லாஹ் இவர்களுக்கு மார்கத்தை விளங்க நல்லுதவி புரிவாயாக! ஆமீன்.

**இந்த ஹதீதில் இடம் பெற்ற ஸஹாபாக்களின் அனைத்து செயல்களையும் தஃழீம் மரியாதை எனச் சொல்லப்பட்டது. இதன் மூலமாக சொல்லால் அல்லது செயலால் எப்படியாவது மரியாதையை வெளிப்படுத்தப்படுமானால் அவ்வனைத்தும் தஃழீம் எனக் கூறும் நமது தஃவத் உண்மையாகின்றது.**



மேலும் புகாரி, முஸ்லிம் எனும் கிரந்தத்தில் ஹஸ்ரத் அபூ ஜுஹைபா ؓ அவர்களைத் தொட்டும் ரிவாயத் செய்யப் பட்டுள்ளதாவது:-

رأيت رسول صلى الله عليه وسلم بمكة
وهوبالابطح في قبة حمراء من ادم ورأيت
بلالا أخذوضوء رسول الله صلى الله
عليه وسلم ورأيت الناس يبتدرون ذلك
الوضوء فمن اصاب منه شيأ تمسح به
ومن لم يصب منه أخذمن بلل يد صاحبه

பொருள் :-

நான் நபி முஸ்தபா ﷺ அவர்கள் மக்கா முகர்ரமாவில் "அப்தஹ்" எனும் இடத்தில் பச்சை நிற கூடாரத்தில் வீற்றிருக்கக்கண்டேன். மேலும் நான் பிலால் ؓ அவர்கள் நபி கோமான் ﷺ வுழுச் செய்த மீத மான தண்ணீரை எடுப் போராகவும், ஸஹாபாக்கள் அத்தண்ணீரைப் பெற விரைந்து செல்வதையும்.

அது யாருக்குக் கிடைத்ததோ அதைக் கொண்டு தன் உடம்பில்பூசிக் கொள்வோராகவும், அதைப்பெறாதவர் பெற்றவரின் கையிலிருந்த ஈரத்தைக் கொண்டு பூசுவோராகவும் இருப்பதைக் கண்டேன். (புகாரி, முஸ்லிம், மிஷ்காத் பக்கம் 74)

இந்த ஹதீதிலிருந்தும் ஸஹாபாக்கள் நபி முர்தழா ﷺ அவர்களுக்கு அளவு கடந்த மரியாதை செய்வோராயிருந்தார்கள் என்பது புரியவந்தது நபியவர்கள் வுழச் செய்த தண்ணீரைப் பெற்று அருள் பெற முயற்சி செய்தனர். மேலும் ஒருவர் மற்றொருவருடன் போட்டிபோடுவோர்களாகவும், எத்தோழர் அத்தண்ணீரை பெறவில்லையோ அவர் பெற்றுக் கொண்டவரின் ஈரழிப்பைக் கொண்டு பறகத்தை நாடி பூசிக்கொள்வோராகவும் காணப் பட்டார்கள்.

மேலும் ஹதீத் ஷரீபில் வந்துள்ளதாவது:-

ஓர் குறைஷி அடிமை நபிகளார் ﷺ அவர்களின் உடம்பிலிருந்து வெளியான குருதியை குடித்துவிட்டார். இதைக் கண்ணுற்ற அண்ணல் நபி ﷺ அவர்கள் அவ்வடிமையை நோக்கிக்

اذهب فقداحررت نفسك من النار.

நகர்ந்து செல்! நீ உன்னை நரக நெருப்பிலிருந்து விடுதலை **பெறச்செய்துவிட்டாய் என கூறினார்கள்**

**(கஸாயிஸ் அல் குப்ரா பாகம் 2.பக்கம் 252)**

எவையெல்லாம் உயிர் உள்ள பொருள் என கணிக்கப்படுமோ அவை அனைத்தில் நின்றும் வெளியான இரத்தம் ஹராமான ஒன்றாகும். ஆக மனித குலத்தின் இரத்தம் படித்தரம் கூடிய ஹராமாகும். ஆனால் நபியே கரீம் ﷺ அவர்களுடைய புனிதஉடலிருந்து வெளியாகும் குருதியோ தனிப்பட்ட தன்மைகளைக்கொண்டதாகும். அந்தக் குருதி ஹராமானதல்ல. மாறாக அதைகுடிப்பது அருள் மிக்க செயலும், அதைச் செய்த ஒருவனுக்கு கூலி.நன்மை கிடைப்பது அவசியமாக்கப்பட்டதாகும். இதனால்தான்அச்சிறுவன் அதை அருந்தியும் கோமான் ﷺ அவர்கள் சினம் கொள்ளாது நரகத்திலிருந்து விடுதலை பெறச் செய்துவிட்டாய் என சுபச்செய்தி கூறினார்கள். இதுவும் நபிகளார் கோமான் ﷺ அவர்களுக்கு புரியும் தஃழீம் மரியாதையாகும். இதனாலயே அச்சிறுவர் அக்குருதியைபருகியதற்கு உபகாரமாக நரகிலிருந்து விடுதலை செய்யப்பட்டவரானார்.

ஹஸ்ரத் ஆபூபக்ர் ஸித்திக் ؓ அவர்களின் மனைவியார் ஹஸ்ரத் அஸ்மா பின்த் உமைஸ் ؓ அவர்களைத் தொட்டும் ஷிபா ஷரீப்பாகம் ஒன்று, பக்கம் 158யில் ரிவாயத் செய்யப்பட்டுள்ளது.சொன்னார்கள்:-

انه صلى الله عليه وسلم كان يوحى اليه
ورأسه في حجرعلي فلم يصل حتى غربت
الشمس فقال رسول الله صلى الله عليه
وسلم اصليت يا علي فقال لا فقال اللهم
انه كان في طاعتك وطاعة رسولك فاردد
عليه الشمس قالت اسماء فرأيتها غربت ثم
رأيتها طلعت ووقفت على الجبال والارض
ذلك في الصحباء خيبر

பொருள்:-

நபிகளார் ﷺ அவர்களுக்கு வஹி வந்து கொண்டிருந்தது. அச்சமயம் நபிகள் திலகம் ﷺ அவர்கள் தனது முபாரகான சிரசை ஹஸ்ரத் அலி ؓ யின் மடியில் வைத் திருந்தார்கள். இதனால் அலி ؓ அவர்களுக்கு சூரியன் அஸ்த மிக்கும் வரைகடமையான "அஸ்ர்" தொழுகையை நிறைவேற்ற சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. பின்னர் நபிகள் கோமான் ஹஸ்ரத் அலியைப்பார்த்து நீங்கள் அஸ்ர் தொழுதீர்களா? என வினவ, இல்லை என பதில் கொடுத்தார்கள். இவ்வாறு பதில் சொல்ல: யா அல்லாஹ் நிச்சயமாக ஹஸ்ரத் அலி ؓ அவர்கள் உனக்கும், எனக்கும் வழிப்படுவதிலே இருந்திருந்தார். எனவே அவர் அத்தொழுகையை



நிறைவேற்றுமளவுக்கு சூரியனை மீழச்செய் என இருகரமேந்தினார்கள். ஹஸ்ரத் அஸ்மா பின்த் உமைஸ் ؓ கூறுகிறார்கள்: நான்சூரியனை மறைந்திருக்க கண்டேன். நபிகளார் இவ்விதம் பிரார்த்தனை செய்த பின்னர் சூரியன் மீண்டும் வெளியாகி மலைகளுக்கு மத்தியில் தரித்தவண்ணம் பூமியின் மீது பிரகாசத்தை கொடுத்தது. இந்தச் சம்பவம் கைபர் எனும் இடத்திற்கு சமீபமாக ஸஹ்பா எனும் இடத்தில் இடம்பெற்றது என கூறினார்கள்.

இந்த ஹதிதிலிருந்து தெரியவந்ததாவது:- ஹஸ்ரத் அலி ؓ அவர்கள் நபிகளார் ﷺ அவர்களுக்கு மரியாதை செய்யும் முகமாக கட்டாய கடமையான ஓர் வணக்கத்தை, நபியின் தூக்கத்திற்காக அர்பணித்து விட்டார்கள். இதனால்தான் ஈமானுடையோர்களிடம் நபிக்கு தஃழீம் செய்வது ஈமானின் ஓர்அம்சமாக இருந்தது. நபி ﷺ அவர் களுக்கு தஃழீம் மரியாதைசெய்வது ஈமான் கொண்ட பின்னர் சகல பர்ழான வணக்கங்கள்அனைத்தையும் விட முற்படுத்தப்பட்டதுமாகும்.

தொடர்ந்து ஹஸ்ரத் உமர் பாறூக் ؓ அவர்கள் ஹஸ்ரத் சித்திகுல் அக்பர் ؓ அவர்களின் சம்பவத்தை ரிவாயத்செய்கிறார்கள்:-

سار مع رسول الله صلى الله عليه وسلم الى
الغارفلما انتهيا اليه قال والله لا تدخله حتى
ادخل قبلك فا ن كان فيه شيئى اصابني دونك
فدخل فكسعه ووجدفي جانبه ثقبافشق ازاره
وسدها به وبقي منها اثنان فالقمها رجليه ثم
قال لرسول الله صلى الله عليه وسلم ادخل
فدخل رسول صلى الله عليه وسلم ووضع
رأسه في حجره ونام فلدغ ابوبكرفي رجله و
لم يتحرك مخافة ان يتنبه رسول الله صلى الله
عليه وسلم فسقطت دموعه على وجهه رسول
الله صلى الله عليه وسلم فقالك مالك ياابا

பொருள்:-

நபிகள் பெருமானார் ﷺ அவர்கள் ஹிஜ்ரத் (மக்காவிலிருந்து மதினாவுக்கு) சென்ற சமயம் ஹஸ்ரத் சித்திகுல் அக்பர் ؓ அவர்கள் வழித்தோழராக இருந்தார்கள். இருவரும் தௌர் எனும் குகையை சென்றடைந்ததும், ஹஸ்ரத் அக்பர் ؓ அவர்கள் அண்ணல் நபியை நோக்கிக் கூறினார்கள்:- அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் நுழைய

بكرقال لدغت فداك ابي وامي فتفل رسول
الله صلى الله عليه وسلم فذهب ما يجده ثم
انتقض عليه و كان سبب موته(مشكوةص٥٥٦)

முன்னர் நீங்கள் நுழையக்கூடாது. அங்கேதிங்கு விளைவிக்கும் விசமிகள் இருப்பின் எனக்கு விளைவு ஏற்பட்டாலும். நீங்கள் சரீர சுகத்தோடு இருக்கவேண்டும்என்பதற்காகவே! பின்னர் ஹஸ்ரத் அவர்கள் உள்ளே நுழைந்து நன்றாக சுத்தம் செய்தார்கள். அங்கே தெண்பட்ட துவாரங்களை தனது ஆடையை துன்டாக்கி மறைத்தார்கள். பின்பும் இரு துவாரங்கள் தெண்பட அதனை குதிகால்களால் முடிக்கொண்டிருந்தார்கள். அதன் பின்னர்தான் நபி கரீம் ﷺ அவர்களை உள்ளே அழைத்தார்கள். நுழைந்ததும் தனது முபாரகான சிரசை ஹஸ்ரத் அவர்களின் மடியில் வைத்தவன்னம் உறங்கிவிட்டார்கள் அச்சமயம் எவ்விடங்களை தோழர் தனதுபாதங்களால் மறைத்திருந்தார்களோ அவ்வவழிகளினூடாகபாம்பு வந்து தோழர் அவர்களின் பாதத்தைத் திண்டியது. இதன்காரணத்தால் நோவினை உன்டாகியும் நாயகத்தின் உறக்கத்திற்கு இடையூறு செய்யாதிருக்க ஆடாது அசையாது இருந்தார்கள். நோவினை அதிகரிக்க அதிகரிக்க வேதனை தாங்காமல் கண்கள் கண்ணீர் சொட்ட ஆரம்பித்தது. அக்கண்ணீர் மடியில் களைப்பாறிக் கொண்டிருந்த அண்ணல் நபியின் நெற்றியில் விழவே கண் விழித்தார்கள் கருனைக் கடல் ﷺ அவர்கள் என்ன நடந்தது அபூ பக்ரே! என வினவ. எனது தாயும் தந்தையும் தங்களுக்கு அர்ப்பனமாக பாம்பு திண்டிவிட்டது என பதில் கூறவே. அவ்விடத்தில் திரு நபியின் பரிசுத்த உமிழ் நீரை வைத்ததும் நோவினையிலிருந்து சுகம் பெற்றார் தோழர் அவர்கள். பின்னர்சற்று காலம் கழிந்ததும் அவ்விடம் மீண்டும் வீங்கி. அதன்காரணத்தாலயே மறைவும் ஏற்பட்டது

இவை யாவும் நபி ﷺ அவர்களுக்குப் புரியும் தஃழீமில் நின்றும் உள்ளதாகும். எழுந்து நின்று தஃழீம் செய்வது ஷிர்க், குப்ராயிருக்குமானால் மேற் கூறிய இரு நபித் தோழர்களும் செய்தசெயற்கள் யாவும் படித்தரம் உயர்ந்த ஷிர்க், குப்ராகப்போகவேண்டும். "நஊது பில்லாஹ்" அல்லாஹ் நம்மைப்பாதுகாப்பானாக!

மேலும் ஹஸ்ரத் உஸாமா பின் ஷிர்ரீக் ؓ அவர்கள் செய்த ரிவாயத் ஷிபா ஷரீப் பாகம் இரண்டு. பக்கம் முப்பத்தொன்றில் இடம் பெற்றுள்ளது. சொன்னார்கள்:-



اتيت النبي صلى الله عليه وسلم واصحابه
حوله كانما على رؤسهم الطير(شفاء شريف
ج٢ص٣١)

பொருள்:-

நான் நபிகள் கோமான் ﷺ அவர்களின் சபைக்கு சமுகம் கொடுத்தேன். அப்போது அங்கே வீற்றிருந்த தோழர்களின் நிலையோ அவர்களின் தலைகள் மீது பட்சிகள் உட்கார்ந்திருப்பதுபோல ஆடாது. அசையாது அமர்ந்திருந்தார்கள்.

நபிகள் திலகம் ﷺ அவர்களின் சபையில் வீற்றிருந்தோர் நிலைமை எப்படி என்றால் அவர்களின் சிரசுகளில் பட்ச்சினங்கள் வந்தமர்ந்தால் அது பறந்திடாமலிருக்க எவ்விதம் ஆடாது அசையாது இருக்க வேண்டுமோ அவ்விதமாகவே அமர்ந்திருந்தார்கள். இதுவும் அம்மகானுக்கு புரியும் தஃழீமாகும்.

ஹஸ்ரத் காழி இயாழ் அவர்கள் நாயகம் ﷺ அவர்களுக்கு தஃழீம் கண்ணியம் செய்தல் என்னும் தொடரில் பின்வரும் இந்தஹதிதை குறிப்பிட்டுள்ளார்கள். இது ஹஸ்ரத் அனஸ் ؓ அவர்களைக் கொண்டு ரிவாயத் செய்யப்பட்டது.

لقدرأيت رسول الله صلى الله عليه وسلم
والحلاق يحلقه وقداطاف به اصحابه فما
يريدون ان تقع شعرة الا في يد رجل(مسلم
شريف ج٢ص٢٥٦)

பொருள்:-

முடி சிரைப் பவன் நபிகளார் ﷺ அவர்களின் முடிகளை சிரைத்துக் கொண்டிருக்கும் நிலையில் கண்டேன். அவர்களைச் சுற்றி வளைத்து தோழர்களும் வீற்றிருந்தார்கள். தோழர்களோ நபிகளாரின் ஒரு முடியேனும் அவர்களில் எவராவதுடைய கரங்களில் விழவே அன்றி கிழே விழ விடாவண்ணமிருந்தார்கள்.

ஸஹாபாக்கள் அவர்களின் வெட்டப்பட்ட முடிகளை பெறுவதற்காக அவர்களைச் சூழ அமர்ந்திருந்ததும், அருள் மிக்க ஓர் முடியேனும் தரையில் விழ சம்மதிக்காதும் இருந்தது அன்னாருக்குப் புரியும் தஃழீமில் நின்று முள்ளதாகும்.

மேலும் காழி இயாழ் ﵀ அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

من تعظيم الصحابة له صلى الله عليه وسلم لما أذنت قريش لعثمان رضي الله عنه في الطواف بالبيت حين وجهه اليهم في القضية ابي وقال ما كنت لافعل حتى يطوف به رسول الله صلى الله عليه وسلم(شفاء شريف ج٢ص٣١).

பொருள்:- ஸஹாபாக்கள் நாயகம் ﷺ அவர்களுக்கு புரிந்த மரியாதைகளில் இதுவும் ஒன்றாகும். அதாவது:- குறைஷிக் காபிர்கள் உஸ்மான் ﵁ அவர்களுக்கு இறைவீட்டை தவாப் செய்வதற்கு அனுமதி வழங்கிய சமயத்தில், சமாதான உடன்படிக்கைக்காக நபிகள்கோமான் ﷺ அவர்கள் மக்கா அனுப்பி வைத்தபோது, தோழரவர்கள் மறுத்துவிட் டார்கள். நபிகளார் ﷺ அவர்கள் தவாபு செய்யாத வரை நான் தவாபு செய்யமாட்டேன் எனக்கூறினார்கள்.

மேலும் ஹஸ்ரத் முகீரா பின் ஷுஃபா ﵁ அவர்கள் அறிவித்த ஒன்றாகிறது.

كان اصحاب رسول الله صلى الله عليه وسلم
يقرعون بابه بالاظفير(شفاء شريف ج٢ص٣٢)

பொருள்:-

நபிகள் திலகம் ﷺ அவர்களின் தோழர்கள் தங்கள் கைவிரல்களின் நகங்களைக் கொண்டு அன்னாரின் வீட்டுக் கதவைதட்டுவோராயிருந்தார்கள்.

ஹஸ்ரத் முல்லா அலீ காரி ﵀ அவர்கள் இதற்கு விரிவுரையில்

أي ضربا خفيفا ودقالطيفاتعظيما وتكريما
وتشريفا(شرح الشفاءج٣ص٣٩٥)

பொருள்:-

நபிகள் பெருமானார் ﷺ அவர்களுக்கு சங்கை கண்ணியம் கௌரவம் செய்யும் முகமாக மிக மெல்லினமான முறையில் தட்டுவோராயிருந்தார்கள் எனக் குறிப்பிட்டுள்ளார்.



## தஃழீம் செய்யப்படும் பொருள் முன்னால் இருக்க வேண்டும் என்பது அவசியமல்ல

ஸஹாபாத் தோழர்கள் இவ்விதமெல்லாம் நபி ﷺ அவர்களுக்கு தஃழீம் மரியாதை செய்தது உண்மைதான். எங்களுக்கும் அண்ணாரை தரிசிக்கும் வாய்ப்பு கிடைத்திருந்தால் நாங்களும் எல்லா விதத்திலும் அவர்களுக்கு தஃழீம் செய்வோம். நாம் அன்னாரை காண்பதே இல்லையே! பின் எதற்கு நாம் தஃழீம் செய்வது? என்பது சிலர்களின் கூற்று.

இந்த சந்தேகத்திற்கான பதில் யாதெனில்,எதற்கு, எவருக்கு நாம் தஃழீம்( மரியாதை) செய்கிறோமோ அப்பொருள் நம்முன்னால் இருக்க வேண்டும் என்பது அவசியமல்ல என்பதே!புகாரி, முஸ்லிம் இரு கிரந்தத்திலும் ஹஸ்ரத் அபூ அய்யூப் அன்ஸாரி ﵁ அவர்களைத் தொட்டும் ரிவாயத் செய்யப்பட்டுள்ளது. நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.

اذااتيتم الغائط فلاتستقبلواالقبلة ولا تستد
بروها(مشكوة شريف ص٤٢)

பொருள்:-

நீங்கள் மலகூடம் செல்வீர்களானால் கிப்லாவை முன்னோக்கவோ, பின்னோக்கவோ வேண்டாம் (மிஷ்காத் பக்கம்42)

ஹஸ்ரத் முல்லா அல் காரி ﵀ இந்த ஹதிதுக்கு விரிரையில்

أي جهة الكعبة تعظيما لها(مرقاةج١ص٢٨٣)

பொருள்:-

கஃபாவை முன்னோக்கியோ பின்னோக்கியோ மல சலம் கழிக்காதீர்கள் எனச் சொன்னது அக் கஃபாவுக்கு தஃழீம் மரியாதை செய்வதற்காகவே என குறிப்பிட்டுள்ளார். (மிர்காத்,பாகம் 1, பக்கம் 283)

சிந்தியுங்கள்:- மலகூடம் செல்லும் ஒருவனின் முன்னால் கஃபாவோ இல்லை. அதை அவன் காண்கிறானுமில்லை, அப்படி இருந்தும் அவன்மீது கஃபாவுக்கு தஃழீம் செய்வது கடமையாகும். கஃபாவை பார்க்கவில்லை என்பதற்காக அவன் கஃபாவுக்கு தஃழீம் செய்யவில்லையானால் அவன் இமாம் அபூ ஹனீபா ﵀ அவர்களிடம் ஹராமான செயலைச் செய்தவனாக கணிக்கப்படும்

(அஷிய்யதுல்லம் ஆத், பாகம் 1, பக்கம் 198.)

மேலும் புகாரி, முஸ்லிம் கிரந்தங்களில் ஹஸ்ரத் அபூஹுரைராؓ அவர்களைத் தொட்டும் ரிவாயத் உள்ளது.பெருமானார்ﷺ அவர்கள் கூறினார்கள்:-

اذا قام احدكم الى الصلاة فلا يبصق امامه

(مشكوة شريف ص٦٩)

பொருள்:-

உங்களில் ஒருவர் தொழுவதற்காக எழுந்து நின்றால்தனக்கு முன்னால் துப்ப வேண்டாம் (மிஷ்காத் பக்கம் 69)

ஹஸ்ரத் முல்லாஅலீ காரிؒ அவர்கள் இந்த ஹுக்ம் சட்டத்திற்கான காரணத்தை விபரிக்கையில்

تخصيص القبلة لتعظيمها(مرقاة ج١ص٤٥٥)

கிப்லாவின் பக்கம் துப்ப வேண்டாம் எனத் தடுத்தது அதற்கு செய்யும் தஃழீமாகும் எனக் குறிப்பிட்டுள்ளார்

(மிர்காத் பாகம்1, பக்கம் 455)

கஃபா ஆயிரமாயிரம் கிலோ மீட்டருக்கு அப்பால் இருந்தும், அது பார்வைக்கு எட்டாத ஒன்றாக இருந்தும்கூட அதன் திசையில் துப்ப வேண்டாம் எனத் தடுத்தது அதற்கு புரியும் தஃழீம் என அறியப் பட்டுவிட்டது.

மேலும் பிரபல்யமான ஹதீத் கிரந்தமாகிய அபூ தாவூதில் நபித் தோழர் ஹஸ்ரத் சாயிப் பின் கல்லாத்ؓவைத் தொட்டும் ரிவாயத் செய்யப்பட்டுள்ளது:-

ان رجلا ام قوما فبصق الى القبلة ورسول
الله صلى الله عليه وسلم ينظر فقال رسول
الله صلى الله عليه وسلم لقومه حين فرّغ
لايصلى لكم فارادبعدذالك ان يصلى لهم
فمنعوه فاخبروه بقول رسول الله صلى الله
عليه وسلم فذكرذلك لرسول الله صلى الله
عليه وسلم فقال نعم وحسبت انه قال انك
قدآذيت الله ورسوله(مشكوة شريف ص٧١)

பொருள்:-

ஒரு மனிதர் தனது கூட்டத்தாருக்கு இமாமாக நின்று தொழுகை நடத்தினார். அப்போது அம்மனிதர் கிப்லாவின்திசைப் பக்கம் துப்பிவிட்டார் இதனை கண்ணுற்ற நபிகள் நாதர்ﷺ அவர்கள் தொழுகை முடிந்ததும் இதன்



பின் இம் மனிதர் இமாமத் செய்யக் கூடாது எனக் கூறினார்கள். அதன் பின்னர் அதே மனிதர் இமாமத் செய்ய நாடக் கூடியிருந்தோர் தடுத்து நிறுத்தி அண்ணலாரின் வாக்கை எடுத்தியம்பினார்கள். அதைப் பற்றி நாயகத்திடம் வினவிய போது நான் தடுத்துள்ளேன் எனப் பதிலுரைத்தார்கள். ஹதீதை ரிவாயத் செய்தவர் கூறுகிறார். எனக்கு நபிகளார் இவ்வாறும் கூறினார்கள் என்று எண்ணம் உள்ளது அதாவது:- நீ அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் நோவினை செய்தாய் என்று (மிஷ்காத் பக்கம் 71)

இந்த ஹதீது ஷரீப் மூலமாகவும் தஃழீம் செய்வதற்காக தஃழீம் செய்யப்படும் பொருள் முன்னிலையில் இருக்க வேண்டிய அவசியமில்லை என்பது தெளிவாகிவிட்டது. இமாமுக்கு முன்னிலையில் கஃபா இருக்கவில்லை, பின்பும் அதற்கு தஃழீம் அவசியம், மேலும் எவன் கஃபாவுக்கு தஃழீம் செய்யவில்லையோ அல்லது அதற்கு தரக் குறைச்சலான செயலை செய்தாலோ அவனைக் கொண்டு இமாமத் செய்யப்படாது என்றும், ஆரம்பத்திலிருந்தே இமாமாக நியமிக்கப் பட்டிருப்பின் அவன் நீக்கப்படவேண்டும் என்பதும் அறியப்பட்டது. இப்படியாக கற்களால் கட்டப்பட்ட ஓர் கஃபாவுக்கு தஃழீம் செய்வது கடமையென்றால், கஃபாக்கெல்லாம் கஃபாவான, கஃபாவே உருவாகக் காரணமாயிருந்த நபிகட்கரசர் உலக இரட்சகர் அஹ்மத் முஜ்தபாﷺ அவர்களுக்கு தஃழீம் எவன் செய்யவில்லையோ அல்லது தஃழீம் செய்வதை நிராகரிப்பதுடன் அவர்களுக்கு தரக்குறைச்சலும் எவன் செய்வானோ அவன் எவ்விதம் இமாமத் செய்யமுடியும். அவன் அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் நோவினை செய்பவன் ஆவான்.

ان الذين يوذون الله ورسوله لعنهم الله

في الدنيا والاخرة واعدلهم عذابا مهينا

பொருள்:-

நிச்சயமாக எவர்கள் அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும் நோவினை செய்கின்றார்களோ அத்தகையோர்களுக்கு துன்யா ஆகிரத் இருலோகத்திலும் அல்லாஹ்வின் லஃனத் சாபம் உள்ளது. மேலும் அவர்களுக்காக இழிவான வேதனையையும் தயாராக்கியுள்ளான். (22:5)

## நபியின் பக்கம் சேரும் பொருட்களுக்கு த:ஃழீம்

எப்பொருட்கள் நபிகள் திலகம் ﷺ அவர்களின் மூலமாக அறிமுகப்படுத்தப்பட்டதோ அப்பொருட்களும் தஃழீம் செய்யப் படவேண்டும். ஏனெனில் அப்பொருட்களுக்கு தஃழீம் செய்வது நபி ﷺ அவர்களுக்கு தஃழீம் செய்ததாகும்.

ஹஸ்ரத் காழி இயாழ் ؓ கூறுகிறார்கள்:-

من اعظامه واكباره صلى الله عليه وسلم

اعظام جميع اسبابه واكرام مشاهده وامكنته

من مكة والمدينة ومعاهده وماالمسه صلى الله

عليه وسلم اوعرف به

பொருள்:-

எப்பொருட்கள் எல்லாம் நபிகளாருடையது, அல்லது அவர்கள்பாவித்தது, அல்லது அவர்கள் செய்தது இப்படியாக நிரூபிக்கப்படுமோ அவ்வனைத்திற்கும் தஃழீம்செய்யப்படுவதும், மேலும் எவ்விடங்களிலெல்லாம் அவர்கள்வருபவர், போவோராக, தரிப்போராக இருந்தார்களோ அவ்விடங்களுக்கும் சங்கை செய்யப் படுவதும், எப்பொருட்களிலெல்லாம் அவர்களின் திருக்கரம் பட்டதோ, அல்லது எவை எவை எல்லாம் அவர்களின் பெயரைக் கொண்டு அழைக்கப்படுகிறதோ அவ்வனைத்திற்கும் தஃழீம் மரியாதைசெய்வது நபி ﷺ அவர்களுக்கு செய்யப்படும் தஃழீம் மரியாதையில் நின்று முள்ளதாகும் (ஷிபாஃ ஷரீப் பாகம் 2, பக்கம்44)

இதனாலயே ஸஹாபாக்கள், தாபிஈன்கள், உலமாக்கள், ரசூல்அக்ரம் ﷺ அவர்கள் பக்கம் சேரும் அனைத்து பொருட்களுக்கும் எப்போதும் கௌரவப்படுத்தியே வந்திருக்கிறார்கள் இதற்கு ஆதார மாக சில சம்பவங்களைப்பார்ப்போம்.

1) ஹஸ்ரத் சிரீன் ؓ அவர்கள் ரிவாயத் செய்கிறார்கள்: அவர்கள் சொன்னார்கள். நான் ஹஸ்ரத் உபைதா ؓ அவர்களுக்கு எங்களிடம் ஹஸ்ரத் அனஸ் ؓ அல்லது அவரின் குடும்பத்தாரிடம் இருந்து கிடைத்த சில முபாரகான முடிகள் இருக்கிறது எனக் கூறினேன். அதற்கு ஹஸ்ரத் உபைதா ؓ அவர்கள்

لان تكون عندي شعرة منه احب الي من الدنيا وما فيها



என்னிடம் முபாரகான அம்முடிகளில் ஒரு முடி இருப்பது உலகம் அதில் உள்ள அனைத்தையும் விட மிகவிருப்பத்திற் குரியதாகும் என்று கூறினார்கள். (புகாரி ஷரீப் பாகம் 1 பக்கம் 29)

2) ஹஸ்ரத் ஸபிய்யாவைத் தொட்டும் ரிவாயத்தாகிறது. சொன்னார்கள். மக்கா முகர்ரமாவில் நபி ﷺ அவர்களின் முஅத்தி னாக கடமை புரிந்த ஹஸ்ரத் அபூ மஹ்தூரா ؓ அவர்களின் தலையின் முற்பகுதி முடி முடிச்சுப்போடப்பட்டிருந்தது. உட்கார்ந்தவர்களாய் முடியை அவிழ்ப்பாரானால் தரையைத் தொடுமளவுக்கு நீளமா யிருந்தது. யாரோ அவரிடம் இம்முடிகளை வெட்டாத காரணமென்ன என வினவ

لم اكن بالذي احلقها وقدمسها رسول الله

صلى الله عليه وسلم بيده(شفاء شريف ج٢

ص٤٤)

ரசூல் முஸ்தபா ﷺ அவர்கள் அவர்களது முபாரகான் கரத்தால் தடவியதால் நான் வெட்ட முடியாது என பதில் கொடுத்தார் (ஷிபாஃ ஷரீப் பாகம் 2, பக்கம் 44).

3) ஹஸ்ரத் ஆஸிம் அஹ்வல் ؓ கூறுகின்றார்கள். நான் ஹஸ்ரத் அனஸ் ؓ அவர்களிடம் நபி ﷺ அவர்கள் உபயோகம் செய்த ஒரு பாத்திரத்தைக் கண்டேன். அது மிக விலையுயர்ந்த பலகையினாற் செய்யப்பட்டிருந்தது. அதன் பிடி உடைந்து போக அவ்விடத்தை வெள்ளியால் செய்திருந்தார்கள். ஹஸ்ரத் அனஸ் ؓ கூறினார்கள். நான் இப்பாத்திரத்தால் ரசூல் ﷺ அவர்களுக்கு எப்போதும் தண்ணீர் அருந்தக்கொடுக்க உபயோகம் செய்திருந்தேன் ஹஸ்ரத் இப்னுசிரீன் ؓ அவர்கள்அதில் ஓர் பகுதி இரும்பு பொருத்தப்பட்டிருப்பதைக் கண்டேன் என்று கூறினார். ஹஸ்ரத் அனஸ் ؓ அவர்கள் அவ்விரும்புத்துண்டை நீக்கி அதை தங்கம் அல்லது வெள்ளியினால் செய்ய நாடினார்கள். அதற்கு அபூ தல்ஹா ؓ

لاتغيرن شيأ صنعه رسول الله صلى الله

عليه وسلم فتركه(بخاري شريف ج٢ص٨٤٢

எப்பொருட்களை ரசூல் அக்ரம் ﷺ அவர்கள் செய்தார் களோஅப்பொருட்களில் எந்த மாற்றமும் செய்ய வேண்டாம் எனக் கூறினார்கள். இதைக் கேட்டதும் அவர்கள் அப்படியே வைத்து விட்டார்கள் (புகாரி, பாகம் 2, பக்கம் 842)

இப்பாத்திரம் அவர்கள் மத்தியில் எந்தளவு தஃழீமுக்கு தகுதி பெற்றதாயிருந்தது என்றால் ஹஸ்ரத் நஸ்ர் பின் அனஸ்ﷺஅவர்கள் தனது அனந்தர சொத்திலிருந்து எட்டு இலட்சம் திர்கத்திற்கு வேண்டினார்கள்.

4) ஹஸ்ரத் சஹ்ல் பின் சஃத்ﷺஅவர்கள் அறிவிக்கின்றார்கள். ஓர் பெண்மனி போர்வை ஒன்றை எடுத்துக் கொண்டு நபிகளார்ﷺ அவர்களின் சபைக்கு சமுகம் கொடுத்தார்கள். அப்பெண்மனி சொன்னார்கள். யா ரசூல்லாஹ்!ﷺ இப்போர்வையை நீங்கள் அணிய வேண்டும் என்பதற்காக என் கரங்களால் நெய்து கொண்டு வந்துள்ளேன். நபிகளாரும் அதை ஏற்றுக் கொண்டார்கள். ஏனெனில் அவர்களுக்கு அச்சமயம் ஆடை தேவைப்பட்டிருந்தது. பின்னர் அவர்கள் அதை கைலி (சரம்) உடுப்பது போன்று அணிந்தவர்களாய் எங்கள் பக்கம் வந்தார்கள். ஸஹாபா தோழர்களில் ஒருவர் யா ரசூல்லாஹ்! ﷺ இதை எனக்கு அணிவியுங்கள் எனக் கூறவே நான் உனக்கு அணிவிப்பேன் என பதிலுரைத்தார்கள். சற்று நேரம் கழிந்ததும் சபையிலிருந்து சென்று, மீண்டும் சமூகம் கொடுத்து அப்போர்வையை மடித்து அம்மனிதரின் வீட்டுக்கு அனுப்பி வைத்தார்கள். ஸஹாபாக்கள் அத்தோழரை நோக்கி நீர் நபிகளார்ﷺ அவர்கள் கேட்பவனுக்கு மறுப்பு தெரிவிக்காதவர்கள் எனத் தெரிந்திருந்தும் இதை கேட்டது ஏன் என கூறவே! அத்தோழர் பின்வருமாறு

والله ما سألتها الا لتكون كفني يوم اموت

فكانت كفنه(بخاري شريف ج٢ص٨٦٥)

அல்லாஹ்வின் மீது ஆனையாக! நான் அதை என் கபன் பிடவையாக ஆக்குவதற்காகவே அன்றி கேட்கவில்லை என பதிலுரைத்தார். அவ்விதமே அது அவரின் கபன்பிடவையாக்கப்பட்டது. (புகாரி பாகம் 2, பக்கம் 865)

5) ஓர் நாள் ரசூல் அவர்கள் சகிபா பனீசாயிதா எனும் கூட்டத்தார் இருக்குமிடத்திற்கு சென்றிருந்தார்கள். அப்போது ஹஸ்ரத் சஹ்ல் பின் சஃதிﷺ அவர்களிடம் தண்ணீர் பருகச் செய்யுமாறு கோரினார்கள். ஹஸ்ரத் சஹ்ல் பின் சஃத் ﷺ அவர்கள் ஓர் பாத்திரத்தில் தண்ணீர் கொண்டுவந்து நபிகளாருக்கும் அவர்களது தோழர்களுக்கும் தண்ணீர் அருந்தச் செய்தார்கள். ஹஸ்ரத் அபூ ஹாசிம்ﷺஅவர்கள் கூறுகிறார்கள்.

اخرج لنا سهل ذلك القدح فشربنا منه



ثم استوهبه عمربن عبد العزيزبعد ذلك

فوهبه له(بخاري شريف ج٢ص٨٤٢)

ஹஸ்ரத் சஹ்ல் பின் ﷺ அவர்கள் அதே பாத்திரத்தில் எங்களுக்கும் தண்ணீர் அருந்தச் செய்தார்கள். பின்பு கலீபா ஹஸ்ரத் உமர் பின் அப்துல் அஸீஸ்ﷺஅவர்கள் ஹஸ்ரத் சஹ்ல்பின் சஃதிடம் கேட்டுப் பெற்றுக் கொண்டார்கள். (புகாரி பாகம் 2, பக்கம் 842)

6) ஹஸ்ரத் அஸ்அத் பின் ஸர்ராரா ﷺ அவர்கள் நபிﷺ அவர்களுக்கு பெறுமதி மிக்க பலகையினால் செய்யப்பட்ட ஓர் கட்டிலை காணிக்கையாக்கினார்கள். ரசூல் ﷺ அவர்கள் அதன்மீது ஓய்வு எடுப்போராக இருந்தார்கள். அவர்கள் தனது கண்களை மூடிக் கொண்டதும் அதன் மீது வைத்தே சகலவேலைகளும் செய்யப் பட்டன. பின்னர் ஹஸ்ரத் சித்தீக்ﷺஅவர்களையும், அதன் பின்னர் ஹஸ்ரத் உமர்ﷺயையும் அதன் மீது வைக்கப்பட்டே கபன் செய்யப்பட்டது. பின்னர் ஹஸ்ரத் அப்துல்லாஹ் பின் இஸ்ஹாக்ﷺஅவர்கள் அன்னை ஆயிசா சித்திக்காவின் முன்னிலையில் நான்காயிரம் திர்கத்திற்கு வேண்டினார்கள் (ஸுர்கானி பாகம் 3, பக்கம் 386)

7) ஹஸ்ரத் முல்லா அலீ காரி ﷺ குறிப்பிடுகின்றார்கள். ஹஸ்ரத்அமீர் முஆவியாﷺஅவர்களிடம் நபியே கரீம்ﷺ அவர்களின் கைலியும், போர்வையும், ஜுப்பாவும், மேலும் அம்மகானின் புனித நகம், முடி போன்றவைகளில் சிலதும் இருந்தன. அவர்கள் தனது வபாதிற்கு முன்னர் பின்வருமாறு வஸிய்யத் செய்திருந்தார்கள்.

كفنوني في ردائه وادرجوني في ردائه وازروني

بازاره واحشوا منحرري وشدقي ومواضع

السجود مني بشعره وظفره وخلوابيني وبين

ارحم الراحمين (مرقاة شرح مشكوة ج٥ص٦٣٨)

**பொருள்:-**

என்னை அன்னவர்களின் ஜீப்பாவைக் கொண்டு கபன் செய்யுங்கள். போர்வையை அணிவியுங்கள் கைலியைக் கொண்டு சுத்துங்கள், மேலும் என்னுள் அந்த நகங்கள், முடிகள் போன்றவைகளை வைத்த நிலையில் விட்டு விடுங்கள் என.

*(மிர்காத் ஷரஹ் மிஷ்காத் பாகம் 5,பக்கம் 638)*

8) ஹஸ்ரத் காழி இயாழ் رضي الله عنه குறிப்பிடுகிறார்கள்:-

رؤي ابن عمررضي الله تعالى عنهما واضعا
يده على مقعدرسول الله صلي الله عليه و
سلم من المنبرثم وضعها على وجهه(شفاء شريف
ج٢ص٤٤)

பொருள்:-

ஹஸ்ரத் இப்னு உமர் رضي الله عنه அவர்கள் தனது கரங்களை கருணைக் கடல் ﷺ அவர்கள் மிம்பரில் எவ்விடத்தில் இருப்பார்களோ அவ் விடத்தில் வைத்து தனது முகத்தில் பூசுவோராக இருக்கக் காணப் பட்டார்கள்.(ஷிபா ஷரீப் பாகம் 2, பக்கம் 44) .

9) ஹஸ்ரத் இமாம் மாலிக் رضي الله عنه யின் ஆசிரியரான ஹஸ்ரத் யஹ்யா

பின் சயீத் رضي الله عنه பற்றி ஹஸ்ரத் அல்லாமா சம்ஹூதி குறிப்பிடு கிறார்கள்:-

انه حيث ارادالخروج الى العراق جاءالى
المنبرفمسحه ودعا(وفاالوفاءج٢ص٤٤٢)

பொருள்:-

நிச்சயமாக அவர் இராக் நாட்டுக்கு பிரயானம் செய்ய விரும்புவாரயானால் நபியே கரீம் ﷺ அவர்கள் மிம்பர் அருகில் வந்து அதை தொட்டுத் தடாவி பிரார்தனை செய்வோராயிருந்தார்கள். (வபா அல் வபா பாகம் 2, பக்கம் 442)

10) ஹஸ்ரத் காழி இயாழ் எழுதுகிறார்கள்:-

كان مالك رحمة الله عليه لا يركب بالمدينة
دابة وكان يقول استحيي من الله ان اطأ تربة
فيها رسول الله صلى الله عليه وسلم بحافردابة

பொருள்:-

இமாம் மாலிக் رضي الله عنه அவர்கள் மதீனா முனவ்வராவில் எந்த மிருகத்திலும் ஏறிப் பிரராயானம் செய்யாதிருந்தார்கள். மேலும் எந்த



மண்ணில் அண்ணல் நபி ﷺ அவர்கள் இருந்து கொண்டிருக்கின்றார் களோ அம்மண் மேல் பிராணிகளின் மீது ஏறிப்பிராயானம் செய்வதில் நின்றும் அல்லாஹ்விடம் வெட்கமடைகின்றேன்.

11) ஹஸ்ரத் அபூ அல் பஸ்ல் ஜௌஹரி அன்தலசி رضي الله عنه அவர்கள் மதீனா தய்யிபாவுக்கு சியாரத்திற்கு சென்றிருந்தால் அப்புனித பூமியை சென்றடைந்ததும் வாகனத்திலிருந்து இறங்கி பின்வரும் கவிதையைப் பாடிய வர்களாய் நடந்து சென்றார்கள்.

نزلنا عن الاكوارنمشي كرامة
لمن بان عنه ان نسلم به ركبا

நாம் வாகனத்திலிருந்து இறங்கி அங்கே வீற்றிருக்கும் புனித மகானுக்கு தஃழீம் செய்யும் முகமாக நடைபாதையில் சென்றோம்.
(ஷிபாஃ ஷரீப் பாகம் 5, பக்கம் 45)

12) ஹஸ்ரத் இஸ்மாயீல் ஹக்கீ رضي الله عنه குறிப்பிடுகிறார்கள்:-

முஹம்மத் எனும் பெயர் கொண்ட அயாஸ் என்பவரின் பையன் சுல்தான் மஹ்மூத் கஸ்னவீ உடைய சபையில் வேலைக்ாக அமர்த்தப் பட்டான். அப்பையனின் பெயர் கொண்டு அழைப்பது அவரின் வழக்கம். ஓர் நாள் தினம் மன்னன் அவன் பெயர் கொண்டு அழைக் காமல் அயாஸ் உடைய பையனிடம் மன்னனுக்கு வுழூஃசெய்யத் தண்ணீர் வைக்குமாறு கட்டளை பிறப்பித்தான். மன்னன் வுழுசெய்த பின்னர் இச்சிறு பெயன் செய்த குற்றம்தான் என்ன எனஅயாஸ் கேட்டான். அதற்கு மன்னன் அவன் பெயர் முஹம்மத் என்பதாக இருந்த தனால் நான் வுழு இல்லாத நிலையில் அப்பெயரை மொழிய வெட்க மாக இருந்தது எனக் கூறினார்.

(தப்ஸீர்ரூஹுல் பயான். 5: 185)

هزار بار بشویم دهن بمشک و گلاب
هنوز نام تو بردن ادب نمی دانم
(تفسیر روح البیان ج ۵ ص ۱۸۵)

மேற்கூறப்பட்ட அனைத்து சம்பவங்கள் மூலமாகவும் ஸஹாபாக்கள், பாமரர்கள் யாவரும் எவைககள்எல்லாம் அந்த நபியின் பக்கம் சேருமோ அவ்வனைத்திற்கும் காலமெல்லாம் தஃழீம் செய்திருக் கிறார்கள் என்பது தெளிவான முறையில் விளங்கி விட்டது. எழுந்து நின்று தஃழீம் செய்வது ஷிர்க். குப்ர் என்றால் இம் மேற்கூறிய சம்பவங் களுக்கு என்ன சொல்லப்போகின்றீர்கள்.

# அண்ணலார் (ஸல்) அவர்களின் ஹதீதுக்கு த∴ழீம்

சங்கையான இமாம்கள், இஸ்லாமிய அறிஞர்கள், எல்லோரும் ஹதிது ஷரீபுக்கு பெரும் மரியாதை செய்திருக்கின்றார்கள். அவர்களில் இமாம் புகாரி رحمه الله அவர்கள் முக்கிய இடத்தில் இடம்பெற்றுள்ளார்கள். ஹஸ்ரத் இமாம் புகாரி رحمه الله கூறியதாக ஹஸ்ரத்முஹம்மத் பின்யூசுப் கர்பரீ رحمه الله கூறுகின்றார்கள்.

ما وضعت في كتاب الصحيح حديثا

(1) الاغتسلت قبل ذلك وصليت ركعتين

(مقدمة فتح الباري ص٥)

பொருள்:-

நான் புகாரி ஷரீப் கிரந்தத்தில் ஒவ்வொரு ஹதீதையும் குறிப்பிடமுன்னர் குளித்து, இரண்டு ரக்அத்துகள் நபில் தொழுத பின்பேஅன்றி குறிப்பிட்டதே இல்லை. (முகத்தமா பத்ஹுல் பாரி பக்கம்5)

ஹஸ்ரத் இமாம் புகாரி رحمه الله அவர்களின் மகத்துவம், பெருந் தன்மை, அறிவாற்றல் யாவற்றையும் உலகம் ஏற்றுக்கொண்ட ஒன்று. அவர்கள் எட்டு இலட்சம் பொன்மொழிகளை மனனமிட்டிருந்தார்கள். அவர்களே ஹதிது ஷரீபுக்கு மரியாதை தஃழீம் செய்யும் நோக்குடன் ஒவ்வோர்ஹதிதையும் பதிவு செய்ய முன் குளித்து இரு ரக்அத் நபில் தொழுதபின்னர் பதிவு செய்திருக்கின்றார்களானால் அந்த தஃழீம் நபியே முஸ்தபா ﷺ அவர்களுக்கு புரியப்படும் தஃழீம் என்பதற்காகவே என்பது தெளிவாகின்றது.

எழுந்து நின்று தஃழீம் செய்வதற்கு குர்ஆன், ஹதிதில் ஆதாரம் எங்கே? எனக் கேள்வி கேட்டும் முட்டாள் தனமான அறிவிலிகளின் கேள்விக்கு இமாம் புகாரி رحمه الله அவர்களின் செயல் சான்று பகிர்கின்றது. அல்லாஹ்வோ, அண்ணல் நபியோ ஹதித் ஷரீபை பதிவுசெய்யமுன் குளிக்கவேண்டும் என்றோ அல்லது நபில் தொழுத பின்னர்தான் பதிவு செய்யவேண்டும் என்றோ கட்டளை இடவில்லை. கட்டளை இடப்படாதது என இமாம் நன்கறிந்தும் நபி ﷺ அவர்களுக்கு தஃழீம் செய்வதற்காகவே இவ்விதமெல்லாம்செய்திருக்கிறார்கள். எனவே தஃழீம் இப்படித்தான் செய்யவேண்டும் என்பதற்கு எந்த ஆதாரமும் தேவையில்லை. எவ்விதத்திலெல்லாம் அன்னவர்களுக்கு தஃழீம் செய்யலாமோ அவ்விதமெல்லாம் புரிவது ஆகுமான அழகான அம்சமாகும்.



(2) ஹஸ்ரத் அபூ முஸ்அப் رحمه الله அவர்கள் கூறுகிறார்கள்.

كان مالك بن انس لا يحدث بحديث

رسول الله صلى الله عليه وسلم الا

هوعلى وضوء اجلالا له

பொருள்:-

ஹஸ்ரத் மாலிக் பின் அனஸ் رحمه الله அவர்கள் நபி ﷺ அவர்களின் எந்த பொன்மொழியையும் ஹதீத்களையும் சங்கை தஃழீம் செய்யும் நோக்குடன் வுழூ இல்லாத நிலையில் அறிவுப்பு செய்யாதோராக இருந்தார்கள். (ஷிபா ஷரீப் பாகம் 2 பக்கம்35)

(3) ஹஸ்ரத் முதர்ரப் رحمه الله அவர்கள் கூறுகின்றார்கள். ஹஸ்ரத் இமாம் மாலிக் رحمه الله அவர்களிடம் மக்கள் எதையாவது கேட்கவந்தால், பணிப்பெண் உடனே வந்து நீங்கள் ஹதித் ஷரீப் சம்பந்தமாகவா? அல்லது மார்க்க சட்டதிட்டங்களை பற்றியா கேட்க வந்திருக்கின்றீர்கள் என கேட்போராயிருந்தார்கள்.வந்திருப்போர்கள் மார்க்க சட்டங்கள் பற்றி எனக் கூறினால் உடனே இமாம் அவர்கள் வெளியில் வந்து சந்தேகங்களைத் தீர்ப்போராகவும், ஹதித் ஷரீப் சம்மந்தமாக எனகூறுவோர்களானால் ஹஸ்ரத் அவர்கள் குளித்து, மணங்கள் பூசி, உடைகள் மாற்றி, எவ்விடத்தில் அமர்ந்து பயான் செய்வார்களோ அவ்விடத்தில் விரிப்புகள் விரிக்கப்பட்டு, ஆரம்பத்திலிருந்து கடைசி வரை மணவஸ்துக்கள் பாவிப்போராக இருந்தார்கள். இதைப்பற்றி இமாம் அவர்களிடம் கேள்வி எழுப்பப்பட்டபோது,

أحب ان اعظم حديث رسول الله

صلي الله عليه وسلم(شفاءشريف

ج٢ص٣٦)

பொருள்:-

நான் இவ்விதமாக நபியே கரீம் ﷺ அவர்களின் சொற்களுக்கு ஹதிதுக்கு தஃழீம் செய்வதை விரும்புகிறேன் எனக் கூறினார்கள். (ஷிபா ஷரீப், பாகம் 2, பக்கம் 36)

4) ஹஸ்ரத் இப்னு மஹ்தி رحمه الله சொல்கிறார்கள்:- நான் ஓர் தினம் ஹஸ்ரத் இமாம் மாலிக் رحمه الله அவர்களுடன் எங்கோ சென்று கொண்டிருந்தேன். நான் பாதை வழியாக சென்று கொண்டிருக்கும் சமயத்தில் ஓர் ஹதிதைப் பற்றிக் கேட்டேன். அதற்குஅவர்கள் என்னை முறைத்துப் பார்த்தார்கள். மேலும் நீர் என்னிடம் இப்படியான

சந்தர்ப்பத்தில் ஹதீத் ஷரீப் பற்றிக்கேட்பாய் என்று நினைத்திருக்க வில்லை யென்று சொன்னார்கள்.(ஷிபா பாகம் 2 பக்கம் 36)

5) காழீ ஜரீர் பின் அப்துல் ஹமீத் அவர்கள் ஹஸ்ரத் இமாம் மாலிக் ﷺ அவர்களிடம் எழுந்து நின்று கொண்டிருக்கும் நிலையில் ஹதீது ஷரீப் ஒன்றைப் பற்றி கேட்க இமாம் அவர்கள் அவரைச் சிறையில் வைக்குமாறு கட்டளை பிரப்பித்தார். இவ்வாறு செய்ததன் காரணம் என்னவென இமாமிடம் கேட்டபோது

القاضي احق ان أدب

காழீ என்பவர் மரியாதை என்றால் என்ன என்பதைப்படிப்பிப் பதற்கு மிக தகுதிபெற்றவர் எனச்சொன்னார்கள். (ஷிபாஷரீப் பாகம் 2. பக்கம் 36)

6) ஹஸ்ரத் இமாம் மாலிக் ﷺ அவர்கள் நின்று கொண்டிருந்த சமயம் ஹிஷாம் பின் காஸீ ﷺ அவர்கள் இமாமிடம் ஓர் ஹதீத்ஷரீப் பற்றிக் கேட்டார். உடனே இமாம் அம்மனிதருக்கு இருபது சௌக்கடி கொடுக்கும் படியாக கட்டளை பிறப்பித்தார்கள்.பின்னர் அவர் மீது இரக்கம் கொண்டு இருபது ஹதீத் ஷரீபுகளைகூறினார்கள். ஹிஷாம் அவர்கள் கூறுகின்றார்கள்:-

وددت لوزادني سياطا ويزيدني حديثا

பொருள்:-

எனக்குத் தண்டனை இன்னும் அதிகமாக்கப்பட்டிருந்தால் ஹதீது ஷரீபுகளும் அதிகமாயிருக்குமே! என ஆசை கொண்டேன்.

(ஷிபாஷரீப் பாகம் 2 பக்கம் 37)

7) ஹஸ்ரத் அப்துல்லாஹ் பின் முபாரக் ﷺ கூறுகிறார்கள். நான் இமாம்மாலிக் ﷺ அவர்களின் சபைக்கு சென்றிருந்தேன்.அப்போது இமாம் ஹதீத் ஷரீபுகள் பற்றி விளக்கம் கொடுத்துக் கொண்டிருந்தார் கள். அதனடுவே ஓர் சிறுவன் பதினாறு தடவைகள் காலால் அடித்துக் கொண்டிருந்தான். அதனால் அவர்களின் நிறம் மாறி மஞ்சல்நிற முடயவராய்க் கொண்டிருந்தார்கள். அப்படியான நிலையிலும் அவர் ஹதீத் ஷரீப் விளக்கத்தை நிறுத்திடவில்லை. அவர்கள் அதிலிருந்து நிறைவு பெற்றதும், நாம் இன்று உங்களிலே ஓர் புதுமையான விடயத் தை கண்டோமே என வீற்றிருந்தோர்கள் கேட்டார்கள். அதற்கு இமாம் அவர்கள் انما صبرت اجلالا لحديث رسول الله

صلى الله عليه وسلم (شفاء شريف ج٢ص٣٦)



நான் பொறுமை செய்ததெல்லாம் நபியே கரீம் ﷺ அவர்களின் பொன்மொழிகளுக்கு தஃழீம் செய்வதற்காகவே எனக் கூறினார்.

(ஷிபா ஷரீப். பாகம் 2. பக்கம் 36)

8) ஹஸ்ரத் இமாம் மாலிக் ﷺ அவர்கள் கூறுகிறார்கள்:- ஓர் மனிதர் ஹஸ்ரத் சயீத் பின் முசய்யப் ﷺ அவர்கள் சாய்ந்து கொன்டி ருக்கும் சமயத்தில் வந்தார். அவர் ஹஸ்ரத் அவர்களிடம் ஓர் ஹதித் ஷரீப் சம்பந்தமாக வினவினார். அப்போது ஹஸ்ரத்அவர்கள் எழுந்திருந்து ஹதித் ஷரீபைப் பற்றி விளக்கம்செய்தார்கள். அம்மனிதர் ஹஸ்ரத் அவர்களை நோக்கி நீங்கள் எழுந்திருந்து கஷ்டப்பட மாட்டீர்களென விரும்பியிருந்தேனெனக் கூற, அதற்கு ஹஸ்ரத் அவர்கள்

اني كرهت ان احدثك عن رسول الله

صلى الله عليه وسلم وانا مضطجع(شفاء

شريف ج٢ص٣٥)

நான் சாய்ந்தவனாக இருக்கும் நிலையில் நபியே கரீம் ﷺ அவர்களைப் பற்றி பயான் செய்வதை வெறுப்பவன் என கூறினார்கள்.

(ஷிபா ஷரீப். பாகம் 2. பக்கம் 35)

தாபிஈன்களின் தலைவர் எனப்படும் ஹஸ்ரத் சயீத் பின் முசய்யப் ﷺ அவர்களும், தபஅத் தாபி ஈன்களில் பெரும் மதிப்புக்குரியவரான இமாம் மாலிக் ﷺ அவர்களும், ஹதீத் ஷரீபுக் கோ, அல்லது எவைகளை எல்லாம் செய்வதனால் நபிகள்நாதர் ﷺ அவர்களின் மதிப்பு கௌரவம் வெளியாகின்றதோ அவைகளைப் புரிவது ஜாயிஸ், முஸ்தஹப்பு ஆகும் என்பதை தங்களது சொல், செயல் இரண்டைக் கொண்டும் உறுதிட் படுத்திவிட்டார்கள். இப்படியெல்லாம் தஃழீம் செய்வதற்கு குர்ஆன் ஹதீதில் தெட்டத்தெளிவாக "ஹுக்ம்" கட்டளை பிரப்பிக்கப்பட வில்லை என்றிருந்தாலும் சரியே! وتعزروه وتوقروه

எனும் சொல் தஃழீம் செய்வதற்கான எல்லா முறைகளையுப உள்ளடக்கியுள்ளது.

இவைகள் மூலம் நாம் விளங்கிக் கொள்ளவேண்டியது யா தெனில்: இமாம் புகாரி, இமாம் மாலிக் ஹஸ்ரத் சயீத் பின் முசய்யப் ﷺ இவர்கள் எந்த ஆதாரத்தை மையமாகக் கொண்டு ஹதீதுக்கு சங்கை செய்வது நபி ﷺ அவர்களுக்கு தஃழீம் செய்வது ஆகும் எனக் கருதினார் களோ! அதே ஆதாரத்தைக் கொண்டே எழுந்து நிற்பது கொண்டும் அன்னாருக்கு தஃழீம் செய்வது ஜாயிசானது என்பது தெளிவாகியது.

# கருணைக் கடல் கோமானின் பிச்சளங்களுக்கு தஃழீம்

பாவிகளான நம்மனைவருக்கும் பாவ மோட்சம் புரியும் அஹ்மதே முஜ்தபா ﷺ அவர்களுக்கு புரியப்படும் தஃழீமில் இதுவும் ஒன்றாகும். அதாவது எவர்களின் சங்கிலித் தொடர் உம்முல் முஃமினீன் பீவி பாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களைக்கொண்டு நிறைவு பெறுகின்றதோ அவர்கள் அனைவருக்கும் தஃழீம் மரியாதை செய்வது அம்மகானுக்கு செய்யும் தஃழீமாகும். ஸஹாபாக்கள், இமாம்கள், உலமாக்கள், மேலும் எவர்லெல்லாம் உண்மையாக முஸ்தபா ﷺ அவர்களை நேசிக்கின்றார்களோ இவர்கள் யாவரும் எப்போதும் நபியின் பிச்சளங்களுக்கு தஃழீம் செய்தே வந்திருக்கிறார்கள்.

1) அல்லாமா இமாம் இப்னு ஹஜர் அச்கலானி ரஹ் அவர்கள் "அஷ்ரபுல் முஅப்பத்" எனும் கிரந்தத்தில் 93ம் பக்கத்தில் எழுதுகிறார்கள்:- ஹஸ்ரத் இமாம் ஹுசைன் ரழி கூறுகின்றார்கள். நான் சிறுவனாய் இருக்கும் காலத்தில் ஹஸ்ரத் உமர்பாறூக் ரழி அவர்களிடம் சென்றிருந்தேன். அப்போது அவர்கள் மிம்பரில் நின்றுகொண்டு பயான் செய்து கொண்டிருந்தார்கள். உங்கள் தகப்பனாரின் மிம்பருக்கு சென்று விடுங்கள் என்று சொன்னேன். ஹஸ்ரத் உமர் பாறூக் ரழி அவர்கள் என் தகப்பனாருக்குமிம்பர் இருக்கவில்லை எனக் கூறினார்கள். மேலும் என்னைபிடித்துத் தன்னிடத்தில் அமரச் செய்தார்கள். நானுமோ என்னிடம் இருந்து சிறு கற்களைக் கொண்டு விளையாடிக் கொணடிருந்தேன். கலீபா அவர்கள் மிம்பரிலிருந்து இறங்கியதும் என்னை அழைத்துக்கொண்டு அவர்களின் வீட்டுக்குச் சென்றார்கள். மேலும் என்னிடம் நீங்கள் அடிக்கடி வருவீர்களானால் எவ்வளவு நன்றாயிருக்கும் என்றும் சொன்னார்கள்.

2) ஹஸ்ரத் சயீத் பின் அபான் குரைஷீ ரழி அவர்கள் மூலமாக ரிவாயத்தாகிறது :- ஹஸ்ரத் அப்துல்லாஹ் பின் ஹசன் பின்ஹுசைன் ரழி அவர்கள் தனது வாலிப காலத்தில் கலீபா உமர்பின் அப்துல் அஸீஸுடைய சபைக்கு சென்றார்கள். கலீபா அவர்கள்என்னை உயர்ந்த இடத்தில் அமரச்செய்து பெரும் கண்ணியம்சங்கை புரிந்தார்கள் என்று அப்துல்லாஹ் பின் ஹுசைன் ரழி கூறினார்கள். அவர்கள் திரும்பிச் சென்றதும் அங்கே இருந்தோர்கலீபாவிடம் நீங்கள் வயது குறைந்த ஓர் வாலிபரிடம் இப்படியாக நடந்துள்ளீர்களே! எனக் கூறினார்கள். அதற்கு கலீபா அவர்கள்

انما فاطمة بضعة مني يسرني مايسرها وانااعلم ان فاطمة لو
كانت حية لاسرها ما فعلت بابنها(الشرف المؤبدص٩٣)



பொருள்:-

நிச்சயமாக பாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் என்னில் நின்றும் உள்ளவர்கள். அவர்களைச் சந்தோஷப்படச் செய்வது என்னை சந்தோஷப்படச் செய்வது போலாகும். மேலும் பாத்திமா உயிரோடிருந்தால் நான் அவர்களின் பாலகரோடுநடந்து கொண்ட முறைகளைக் கண்ணுற்று மகிழ்ச்சியடைந்திருப்பார்கள் என நபிகள்நாதர் ﷺ அவர்கள் கூறியதாகச்சொன்னார்கள் (அஷ்ஷரபுல் முஅப்பத் பக்கம் 93)

3) ஹஸ்ரத் ஷெய்க் அத்வீ ரஹ் அவர்கள் தனது கிரந்தமாகிய "மஷாரிகுல் அன்வாரில்" எழுதுகிறார்கள். அதாவது:- பல்க் எனும் நகரில் "அலவீ" குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர் மரண மடைந்த பின்பு அவரது மனைவி பிள்ளைகளோடு "சமர்கந்" எனும் நகருக்குசென்றார்கள். பிள்ளைகளை பள்ளிவாயலில் விட்டுவிட்டு தனிமையில்அந்த ஊரின் தலைவரைச் சந்தித்து தனது ரகசிய நிலைகளைஎடுத்துக் கூறினார்கள். ஆனால் அத்தலைவன் முஸ்லிமாக இருந்தும் எவ்வித உதவியும் புரியாது நீர் "அலவீ" குடும்பத்தைச் சேந்தவள் என்பதற்கு என்ன சாட்சி? எனக்கேட்டான். அங்கிருந்து மனமுடைந்தவராக அவ்வூரின் கண்காலிப்பாலனிடம் சென்றார்கள். அவன் நெருப்பு வணங்கும் "மஜூசியாக" இருந்தும் இயன்றவரை பல உதவிகளைச் செய்து மரியாதையும் கொடுத்தான். அதன் பறக்கத்தால் அந்த மஜூசியின் குடும்பமே புனித இஸ்லாத்தை ஏற்கும் பாக்கியம் பெற்றனர்.

அன்றய தின இரவு நபியே கரீம் ﷺ அவர்கள் அவ்வூர் தலைவனின் முன் கனவில் சமுகம் கொடுத்து அவனைப் பார்க்காது முகத்தை திருப்பிக் கொண்டார்கள். மேலும் அவ்வூரின் கண்காளிப்பாளனை சுவர்கத்தின் ஓர் மாளிகைப் பக்கம் சுட்டிக் காட்டி

هذاالقصرلك ولاهلك بما فعلت مع العلوية
وانتم من اهل الجنة (الشرف المؤبدص٩٧)

பொருள்:-

நீர் அப்பெண்ணிடம் நடந்து கொண்ட ஒன்றுக்காக இந்த மாளிகை உனக்கும் உனது குடும்பத்தாருக்கும், மேலும் நீங்கள் சுவர்க்க வாதிகள் எனக் கூறினார்கள்: (அஷ்ஷரபுல் முஅப்பத் பக்கம் 97)

4) ஹஸ்ரத் அபூ முஹம்மத் பாரிசி ரஹ் கூறுகிறார்கள் நான் மதினா தய்யிபாவின் சில ஹுசைனீ சாதாத்மார்கள் மீது கோபம் கொண்டிருந்தேன். அவர்கள் சில சுன்னத்துக்கு மாற்றமான

செயல்களைப் புரிகிறார்கள் என்பதற்காகவே நான் அவ்வாறு நடந்து கொண்டேன். ஓர் நாள் தினம் நான் மஸ்ஜித் நபவியின் புனித ரௌழா ஷரீபின் அருகே கண் அயர்ந்துவிட்டேன். அச்சமயம்கனவில் நபிகளார் ﷺ அவர்கள் சமுகம் கொடுத்து எதற்காக நீர் என் பிச்சளத்தார் மீது கோபம் கொண்டுள்ளாய்? என்ன நடந்தது எனக் கேட்டார்கள். அதற்கு நான் "யா நபிய்யல்லாஹ் ﷺ அல்லாஹ்வின் மீது அனையாக நான் அவர்களை விரும்பாமல் இல்லை. அவர்கள் புரியும் சில செயற்கள் எனக்குப் பிடிக்கவில்லை எனச் சொன்னேன். அதற்கு நபியே கரீம் ﷺ அவர்கள்

اليس مسألة فقهية ان الولدالعاق يلحقبالنسب

قلت بلى يارسول الله قال هذاولد عاق فلما

انتبهت صرت ولا القى منهم احداالا بالغت

في اكرامه(الشرف المؤبدص٩٧

பொருள்:-

தாய் தந்தைக்கு வழிப்படாது மாற்றம் புரியும் பிள்ளை வம்சத்தில் சேர்ந்தவனே என்பது மார்க்க சட்ட மஸ்அலா இல்லையா? என நபி ﷺ அவர்கள் விணவ, நானோ வம்சத்தில் சேர்ந்தவனேஎனக் கூறினேன். இப்பிள்ளையும் அவ்வாறே என நவின்றார்கள். நான் கண் விழித்ததும் நான் அவர்களை சந்திக்கும் போதெல்லாம் பெரும் கண்ணியம் செய்பவனானக ஆகிவிட்டேன்

(அஷ்ஷரபுல் முஅப்பத் பக்கம் 97)



## த:ழீமும் தௌஹீனும் மக்கள் உபயோகப் பிரகாரமே

இந்தப் பேச்சு அறிவுடையோர்களிடத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒன்றாகும். எவ்விதம் ஹலப் சத்தியம் செய்வது உலக வழக்கின் முடிவின் பிரகாரமோ! அவ்விதமே "தஃழீமும்" (சங்கை செய்தல்), "தௌஹீனும்" (தரக்குறைச்சல் செய்தல்) மக்கள் முடிவின் பிரகாரப்படியேயாகும். ஏதாவது சொல் அல்லது செயல் ஒரு கூட்டத்தின் புழக்கத்தில் தஃழீமானதாக ஏற்றுக் கொள்ளப் படுமானால், அதே சொல் செயல் மற்றுமோர் சமுதாய பரியாசையில்தௌஹீனாக கணிக்கப்படுமானாலும், முந்திய கூட்டத்தாருக்கு அவை தஃழீம் என்றே முடிவு கொடுக்கப்படும். அல்லாஹுத ஆலா தன் திருக்குர்ஆனில்

لاتقل لهما أف ولا تنهرهماوقل لهما قولا كريما

பொருள்:-

தாய் தந்தை இருவரையும் நோக்கி "சீ" என்று கூடச் சொல்ல வேண்டாம். மேலும் அவர்களை விரட்டிடவும் வேண்டாம். அவர்களோடு இனிமையான முறையில் மரியாதையாகப் பேசிக் கொள்ளுங்கள் (15:3)

ஹஸ்ரத் இமாம் காழீ அபூ ஸைத் ரஹ் அவர்கள் கூறுகின்றார்கள்.

لوان قوما يعدون التأفيف كرامة لا يحرم

عليهم تأفيف الابوين(اصول الشاشي ص٣١)

பொருள்:-

எச்சமுதாயமாவது பெற்றோர்களை நோக்கி "சீ" என்று சொல்வதை தஃழீமானதெனக் கருதுவோர்களேயானால் அவர்கள் மீது அச்சொல்லை உபயோகம் செய்வது ஹராம் அல்ல.

அதாவது இந்த சங்கையான இறை ஆயத்தில் பெற்றோர்களை விழித்து "சீ" என்று சொல்வதை தடுக்கப்பட்டிருந்தாலும் செரியே! ஏனெனில் தஃழீமும், தௌஹீனும் மக்கள் உபயோக முடிவின் பிரகாரமே! எக்கூட்டத்தின் உபயோகத்திலாவது தாய் தந்தை இருவருக்கும் "சீ" என்று சொல்வதால் அவர்கள் அதை இழிவானதெனக் கருதவில்லையால், மாறாக அச்சொல்லை தஃழீமாக கணக் கெடுப் பார்களானால் அவர்களை நோக்கி அதை உபயோகம் செய்வது தவறல்ல. மாறாக அதை உபயோகம் செய்வதால் அவனுக்கு நன்மை கிடைக்கின்றது. அதாவது "சீ" எனும் சொல் அவர்களின்

உபயோகத்தில் தஃழீமாகஇருக்குமானால், அதைக் கொண்டு அவ்விருவரும் சந்தோஷப்படுவார்களானால் அச்செயல் நன்மையைத் பெற்றுத் தரும் என்பதில் சந்தேகமே இல்லை.

எப்படிப் பாரசீக மொழியில் எவருக்காவது **மஹ்தர்** எனும் சொல்லை உபயோகிப்பது அவருக்குப் புரியும் தஃழீமாகும்.ஏனெனில் அச்சொல்லின் பொருள் அவர்களின் உபயோகத்தில் தலைவன், உயர்ந்தவன் என்ற பொருள் கொள்ளும். ஆனால்பாரசீக மொழியில் கண்ணியத்திற்காக உபயோகம் செய்யப்படும் இதே சொல் மற்றுமோர் நாட்டு மொழியான உர்துமொழியில் உபயோகம் செய்வது தரக் குறைச்சலானதாகும்.

மேலும் இதே வழமையானதும் அடிப்படையானதும். நாம் நமது நாட்டில் அல்லாஹ்வுக்கு **மாகிர்** எனும் சொல்லை அவனுக்கு தரக்குறைச்சலானது என்று உபயோகம் செய்வதில்லை. ஆனால் இச்சொல் அரபு நாடுகளில் தரக்குறைச்சல் அல்ல. குர்ஆனில்

والله خيرالماكرين

**பொருள்:-**

"அல்லாஹ் சூழ்ச்சிக்காரர்களில் மிகச் சிறந்த சூழ்ச்சிக்காறன்".

மேலும் ஹதீது ஷரீபில் ஹஸ்ரத் அம்ர் பின் ஷுஐப்ؓ அவர்கள் தனது தகப்பனாரைக் கொண்டும், அவர் அவரின் பாட்டனாரைக் கொண்டும் ரிவாயத் செய்கிறார்கள்.

رأيت رسول الله صلى الله عليه وسلم

يصلى حافيا ومتنعلا(ابوداؤد,مشكوةص٧٣)

**பொருள்:-**

நான் நபியே கரீம்ﷺ அவர்களை செருப்பு அணிந்த, அணியாத இரு நிலமையிலும் தொழக்கண்ணுற்றேன்

*(அபூதாவூத், மிஷ்காத் பக்கம் 73)*

ஹஸ்ரத் அபூ சயீத் குத்ரீؓ அவர்கள் ரிவாயத் செய்துள்ளதாவது:- நபிﷺ அவர்கள் கூறினார்கள்.

اذاجاءاحدكم المسجد فلينظرفان رأى

في نعليه قذرافليمسحه واليصل فيهما

(ابوداؤد,دارمي,مشكوةص٧٣)



**பொருள்:-**

உங்களில் ஒருவர் இறை இல்லமான பள்ளிக்கு வந்தால் அவனது பாதனியில் அசுத்தங்கள் ஏதும் தெண்பட்டால் அதை தடவிய பின்னர் அதை அணிந்தவனாய் தொழுதுகொள்ளட்டும். (அபூதாவூத், தாரமீ, மிஷ்காத் பாகம் 73)

ஹஸ்ரத் ஷத்தாத் பின் அவ்ஸ்ؓ அவர்கள் அறிவிக்கின்றார்கள்:-

قال رسول الله صلى الله عليه وسلم

خالفوا اليهودفانهم لا يصلون في نعالهم

ولا خفافهم(ابوداؤد,مشكوةص٧٣)

**பொருள்:-**

யஹூதிகளுக்கு மாற்றம் செய்யுங்கள். அவர்கள் தங்களது பாதரட்சைகளை அணிந்தும், கால் மேஸ்களையும் அணிந்தவர்களாய் தொழமாட்டார்கள் என அன்னல் நபி ﷺ அவர்கள்கூறினார்கள்.

இந்த ஹதீதுகள் மூலமாக பாதரட்சைகளை அணிந்தவர்களாக இறை இல்லங்களுக்கு சென்று தொழுகையை நிறைவேற்றவதுஆகுமான காரியம் என்பது விளங்கப்படுகின்றது. நபியே கரீம் ﷺ அவர்களும் பாதரட்சைகள் அணிந்து தொழகை நிறைவேற்று வோராயிருந்தார்கள். மேலும் தோழர்களுக்கு அவ்விதம் புரிவதற்கு கட்டளை பிரப்பிப் போராகவும் இருந்தார்கள். ஆனால் இந்த வழமை அரபிகளிடத்தில் அதற்கு புரியும் தௌஹீன்அல்ல. உலக இறை இல்லங்களில் தலை சிறந்த, உயர்ந்த மஸ்ஜித் ஹரமில் இன்றும் பாதரட்சைகளை அணிந்தவர்களாக வருவதைபோவதை காணமுடிகின்றதல்லவா! அவர்கள் அவ்வாறு செய்வதால் அதற்கு புரியும் தஃழீமுக்கு மாற்றம் என நினைக்கவில்லை. அதே நேரம் நமது வழமையில் பாதரட்களை அணிந்து இறை இல்லங்களுக்குச் செல்வது அதற்கு புரியும் தரக் குறைச்சலாக இருப்பினும் சரியே!

அஃலா ஹஸ்ரத் பாஸிலே பரேல்வி இமாம் அஹ்மத் ரஸா கான் பரேல்விؒ அவர்கள் தஃழீம், தௌஹீன் இரண்டும் சமுதாயப் புழக்க திர்ப்பின் பிரகாரமே! காலாகாலமாக இவ்வழக்கம் அதாவது:-

பாவனை செய்யப்பட்ட பாதணிகளை அணிந்து இறை இல்லத்திற்குச் செல்வது மரியாதையானதல்ல என விளங்குவோராயிருந்தார்கள். மார்க்க இமாம்கள் இவ்விதம் செல்வதை சங்கையற்ற விடயம் என்பதாக கூறியுள்ளார்கள் என குறிப் பிட்டுள்ளார்கள்.

இமாம் புர்ஹானுல் மில்லத் வத்தீன் ஹிதாயா எனும் கிதாபில்“பாபுத்தன்ஜீஸ் வல்மஸீத்” எனும் பாடத்திலும், முஹக்கிக் பஹ்ர்ஸைன் பின் நஜீம் அவர்கள் “பஹ்ருர்ராயிக்” “பதாவாசிறாஜியா”, “பதாவா ஆலம் கீரியா” பாகம் 5, பக்கம் 122யில்,“கிதாபுல் கறாஹா” ஐந்தாம் பாடத்தில் இறை இல்லங்களுக்கு பாதரட்சைகளோடு செல்வது வெறுக்கப்பட்ட ஒன்றாகும் எனக் குறிப்பிட்டுள்ளார்.

இதே பேர்ன்று அரபியர்கள் மத்தியில் ஒருவர் மற்றவரை சந்திக்போது கன்னத்தில் முத்தமிடுதல், வீட்டுக்கு வரும் விருந்தாளியைகழுதையில் ஏற்றிச் செல்லுதல் போன்றவை தஃழீமான அம்ஷங்களாகும். இதே அம்ஷங்கள் நமது நடைமுறையில் தரக் குறைச்சலாகும்.

“தஃழீமும்” “தெளஹீனும்” உலக நடமுறை முடிவின் பிரகாரமே!அதற்கான உதாரணங்களில் இதுவும் ஒன்றாகும். அதாவதுஏதாவது நாட்டின் நடமுறையில் எந்தப் பைசாவது இழிவானதாகக் கருதப்படுமானால் ஓர் கண்ணியமானகுடும்பத்தைச் சார்ந்த ஓர் பெண்ணை அந்தப் பணமுடையவருக்கு திருமணம் செய்து கொடுப்பது அப் பெண்மணியின் குடும்பத்திற்குதரக்குறைச்சலான அம்சமாகும். மேலும் அதே பணம் மற்றுமோர் நாட்டில் கண்ணியமானதாக கருதப்படுமானால் அதுதரக்குறைச்சல் அல்ல.

மேற் கூறப்பட்ட உதாரணங்கள் மூலமாக தஃழீம், தெளஹீன் இரண்டும் சமுதாய மக்கள் முடிவின் பிரகாரமே என்பது தெளிவானது. இதே போன்றே நமது வழக்கில் பிறந்த தின தினத்தை கொண்டாடுவது அவருக்கு புரியும் தஃழீமாகும். எனவேரபீஉல் அவ்வல் பிறை பனிரென்டில் உலகத்திற்கு றஹ்மத்தாய் தோற்றமளித்த “மழ்ஹரே அதம்மாகிய”ﷺ அவர்கள் பிறந்த தினத்தை கொண்டாடும் நோக்குடன் அன்றய தினத்தை விடுமுறைதினமாக்குவதும், கடைகளை மூடிடுவதும், குளித்து புத்தாடை அணிந்து வாசன திரவியங்களை உபயோகம் செய்து சந்தோஷத்தை வெளிப்படுத்துவதும், வீடுகளில் விளக்குகளை எரிக்கச் செய்வதும், மீலாத் மேடைகளை அமைப்பதும், வீடுகளில், கடைத்தெருக்களில், இறை இல்லங்களில் மெளலித் மஜ்லிஸ்களை ஏற்பாடு செய்வதும் நமது புனித மார்கத்தில் எந்த சந்தேகமு மன்றி “ஜாயிஸ்”ஆகுமானவிடயங்களாகும். இவையாவும் அன்னாருக்குப் புரியும் தஃழீமாகும்.



# எழுந்து நின்று தஃழீமும் இஸ்லாமிய மார்க்க உலமா அறிஞர்களும்

திருக் குர்ஆனின் “வதுஅஸ்ஸிறூஹு வதுவக்கிறூஹு” என்ற ஆயத்தின்மூலமாக அண்ணல் நபியே கரீம்ﷺ அவர்களுக்கு தஃழீம் செய்வது வாஜிபு கட்டாயக் கடமை என்பது தரிபாடாகிவிட்டது. எவ்விதமான கட்டாயக் கடமை என்பதை முன்னர் சென்றவரிகளிலே ஹஸ்ரத் அல்லாமா காழி இயாழ் رحمه الله அவர்கள்கூறியதைப் பார்த்துக் கொள்.

சங்கை மிகு ஸஹாபாக்கள், மரியாதைக்குரிய இமாம்கள், இஸ்லாமிய அறிஞர்கள், படித்தவர்கள், பாமரர்கள் எல்லோரும்நபி முஸ்தபாﷺ அவர்களுக்கு தஃழீம் செய்யும் விடயத்தில் இயன்ற வரை சகலவிதத்திலும் நிறைவேற்றியிருக்கிறார்கள்.இன்றும் அவர்கள் மீது மஹப்பத் அன்பு கொண்டோர்கள் முடியுமான வரை தஃழீம் செய்கின்றார்கள். ஆனால் இக்கால ஓர்சில புதிய பிரிவுகள் எவர்களின் மத்ஹப் சர்தார் தோ ஆலம்ﷺ அவர்களின் பெருந்தன்மைக்கு இடையூறுவிளைவிப்பதாகுமோ!அவர்கள் எவ்விதெமெல்லாம் தஃழீம் செய்யலாமோ அவைஅனைத்திற்கும் மாற்றம் புரிகிறார்கள். நாம் செய்துவரும்செயல்களுக்குக் குர்ஆன், ஹதிதில் தெளிவான ஆதாரம் இல்லைஎனக்கூறி அச்செயல்களையும், அதைப் புரிகின்றோரையும் அவர்கள் நினைத்தமாதிரி பெயர்களைச் சூட்டுகின்றனர். அதேநேரம் ஆறு இலட்சம் பொன்மொழிகளை மனனம் செய்த இமாம்புகாரி رحمه الله அவர்கள் எந்த இறைவாக்கியம், எந்த நபிவாக்கைஆதாரமாகக் கொண்டு நபிகள் திலகம்ﷺ அவர்களுக்கு தஃழீம்செய்யும் முகமாக ஒவ்வோர் ஹதிதையும் குறிப்பிட முன் குளித்து.இரு ரக்அத்துகள் தொழுதுள்ளார்களோ! தெரியவில்லை.இவ்விதமாக செய்ததற்க்கான ஆதாரத்தை கேட்பதில்லை.மாறாக எழுந்து நின்று தஃழீம் செய்வதற்கான ஆதாரம் குர்ஆனில், ஹதிதில் எங்கே? எனக் கேட்பது நம்மிடம்தான்.அல்லாஹ்வினதும், அவனது தூதரினதும் விரோதிகளே இப்படியான விடயங்களை மறுப்பார்களே தவிர வேறொருவருமில்லை.

(1) நாம் கூறிவரும் விடயங்களை மறுப்போர்களான முகாலிபீன்கள் தங்களது இமாம் என்றும், பெரும் முஜ்தஹித் என்றும் ஏற்றுக்கொண்ட ஹஸ்ரத் தகிய்யுத்தின் சுப்கி رحمه الله அவர்களின் சம்பவம் ஒன்றை ஹஸ்ரத் இஸ்மாயீல் ஹக்கி رحمه الله அவர்கள் குறிப்பிடுகிறார்கள். அதாவது ஹஸ்ரத் அவர்களின் சபையிலே உலமாக்கள் ஒன்று கூடியிருந்த சமயம் ஓர் புகழ்பாடும் கூட்டம்அண்ணல் நபிﷺ. அவர்களின் உயர்தன்மைகளை உள்ளடக்கிய இருபாடல்களைப் பாடினர்

فعندذلك قام الامام السبكي وجميع
من بالمجلس فحصل انس عظيم بذلك
المجلس ويكفي ذلك في الاقتداء(تفسير
روح البيان ج٩ص٥٦)

உடனே இமாம் சுப்கி அவர்களும் அங்கே வீற்றிருந்தோர்களும் எழுந்து நின்றனர். அப்போது சபையில் பெரும் அமைதி ஏற்பட்டது. இதுவே பின்பற்றுவதற்கு போதுமானதாகும்.

(தப்சிர் றூஹில் பயான் பாகம் 9, பக்கம் 56)

(2) ஆரிபு பில்லாஹ் ஹஸ்ரத் சையித் பர்ஸன்ஜீ ﷺ அவர்கள்குறிப்பிடுகிறார்கள்:-

قداستحسن القيام عندذكر الولادة
الشريفة ذودراية ورواية(عقدالجواهر
واقامة القيامه ص١٢)

பெரும் அறிவாற்றலுடைய இமாம்கள் அண்ணல் நபி ﷺ அவர்களின் பிறந்த தின வைபத்தில் எழுந்து நிற்பதை நல்லவிடயம் எனக்கூறியுள்ளார்கள்.

(3) ஹஸ்ரத் உஸ்மாத் பின் ஹஸன் திம்யாதி ﷺ அவர்கள்கூறுகிறார்கள்:-

பொருள்:-

القيام عندذكر الولادة سيدالمرسلين صلى
الله عليه وسلم امرلاشك في استحبابه و
استحسانه وندبه يحصل لفاعله من الثواب
الاوفروالخيرالابكرلانه تعظيم للنبي الكريم
ذي الخلق العظيم الذي اخرجناا لله به

கருணைக் கடல் முஸ்தபா ﷺ அவர்கள் இப்பூலகிற்கு அருட்கொடையாக வந்துதித்த அருள் மிகு தினத்தன்று மீலாத் மஜ்லிஸ்களை ஏற்பாடு செய்து அவர்களின் வருகைக்காக எழுந்து நிற்பது சந்தேகமின்றி முஸ்தஹப்பான வரவேற்கத்தக்க செயல்களாகும்.



من ظلمات الكفرالى الايمان وخلصنا
ا لله به من نارالجهل الى جنات المعارف
والايقان فتعظيمهصلي ا لله عليه وسلم
فيه مسارعة الى رضاء رب العالمين
واظهاراقوى شعائر الدين ومن يعظم
شعائرا لله فانها من تقوى القلوب
ومن يعظم حرمات ا للهفهوخيرله عند
ربه(اثبات قيام ص١٣)

அதை செய்வ பன் பெரும் நன்மை களையும் அதிமிகசிறப்பு களையும் பெற்றுக் கொள்வான் நிச்சயமாக அச்செயல் உயர் குணம் பெற்ற அண்ணல் நபி ﷺ அவர்களுக்குப் புரியும் தஃழீ மாகும். நபி கரீம் ﷺ அவர்கள் எத்தகையவர்கள்என்றால் அவர்களின் பரக்கத்தினால் இறைவன் நம்மை குப்ர் எனும் இருளிலிருந்து நீக்கி ஈமான் எனும் ஒளியின் பக்கம் திசை திருப்பினான். மேலும் அவர்கள் பொருட்டால் நம்மனைவரையும் மடமை எனும் நரகத்திலிருந்த நீக்கி ஈமான் எனும் ஒளியின் பக்கம்திசை திருப்பினான். மேலும் அவர்கள் பொருட்டால் நம்மனைவரையும் மடமை எனும் நரகத்திலிருந்து நீக்கி காப்பாற்றி "மஃரிபத்" "யகீன்" எனும் சுவர்க்கத்தில் புகுதச்செய்தானே! அத்தகைய அம்மகானுக்கு புரியும் தஃழீமாகிறது. இறைவனது திருப்பொருத்தத் தலவில் விரைந்து செல்லக்கூடியதும் மார்கச் சின்னங்களில் ஓர் வலுப்பமான ஒன்றை வெளிப்படுத்துவதுமாகும். எவன் இறை சின்னங்களை கண்ணியப் படுத்துகின்றானோ நிச்சயமாக அவன் உள்ளச்சம் முள்ளவராவார். மேலும் அல்லாஹ்வின் சங்கை மிகு பொருட்களை தஃழீம் செய்வது அவனது இறைவனிடத்தில் நன்மையை பெற்றுத்தரும் ஒன்றாகும்.

(4) ஸைனுல் ஹரம் ஹஸ்ரத் சையித் அஹ்மத் ஸைனீ தஹ்லான் மக்கி ﷺ அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

பொருள்:-

توارثه الائمة الاعلام واقره الائمة و
الحكام من غيرنكيرمنكر ورردادولهذا
كان حسنا ومن يستحق التعظيم غيره
صلى ا لله عليه وسلم-ويكفي اثر عبد

எழுந்து நின்று தஃழீம் செய்வது பிரபல்யமான இமாம்கள் மத்தியில் தொடராகச் செயலில் உள்ளளதென்றும், இமாம்கள், சட்ட மேதைகள் யாவரும் இவ்வம்சத்தை கூடுமென்பதாக கூறியிருக்

கிறார்கள். அவர்களில் எவருமே அதைநிராகரிக்கவோ மறுக்கவோ இல்லை. நபிகள் நாதர் ﷺ அவர்களைத்தவிர தஃழீமுக்கு

ا الله بن مسعودرضي ا الله عنه مارآه

المسلمون حسنا فهوعندا لله حسن،

தகுதி வாய்ந்தவர் யார்இருக்கிறார். மேலும் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் ؓ அவர்கள் அறிவித்த ஒன்றாகிறது:- அதாவது முஸ்லீம்கள் எவ்விடயத்தை நல்லெதன கருதிச் செய்கிறார்களோ அது அல்லாஹ்விடம் நல்ல விடயமே!

(7) ஹஸ்ரத் அல்லாமா காழீ இயாம் ؓ அவர்கள் குறிப்பிடுகிறார்கள்:-

حرمة النبي صلى ا الله عليه وسلم بعد

موته وتوقيره وتعظيمه لازم كما حال

حياته وذلك عندذكرحديثه وسنته و

سماع اسمه وسيرته

பொருள்:-

எவ்விததெமெல்லாம் நபியே கரீம் ﷺ அவர்களுக்கு உலக வாழ்க்கையின் போது தஃழீம் செய்யப்பட்டதோ அவ்விதம்அவர்களின் மறைவின் பின்னும் செய்வது கட்டாயமாகும். அவர்களைஞாபகம் செய்யும் போது அவர்களின் பொன் மொழிகள்கூறும்போது. அவர்கள் புனிதப் பெயர் உச்சரிக்கப்படும் போது.அவர்கள் தஃழீம் செய்யப்படல் வேண்டும. (ஷிபாஉஷ்ஷரீப் பாகம்2, பக்கம் 32)

எழுந்து நின்று தஃழீம் செய்வதை கூடாது. மார்க்கத்தில் உத்தரவிடப்படாதது என்று கூறுவோரான புனித இஸ்லாத்திற்கு மாறுசெய்வோர்களின் பீர்ஸாஹிபு ஹாஜி இம்தாதுல்லாஹ் முஹாஜிர் மக்கி "பைஸலா ஹப்த் மஸ்அலா" எட்டாவது பக்கத்தில் குறிப்பிடுகின்றார்.

فقیر کا مشرب یہ ہے کہ محفلِ مولود شریف میں شریک ہوتا ہوں بلکہ
ذریعۂ برکات سمجھ کر ہر سال منعقد کرتا ہوں اور قیام میں لطف و لذت پاتا ہوں۔

புதுமை என்னவெனில் முர்ஷித் என்றும் ஷெய்க் என்றும் ஏற்றுக்கொண்ட இவர்களது ஷெய்க் மீலாத் மஜ்லிஸ்களை ஏற்பாடு செய்து எழுந்து நின்று தஃழீம் செய்து அதனால் பலாபலன்களையும், பெறுகின்றார். ஆனால் முரீதீன்களோ ஷிஷ்யர்களோ அவ்விடயங்களை ஷிர்க் குப்ர் எனக் கூறுகின்றார்கள். இவர்கள்தங்களது முர்ஷிதுக்கு எப்படி எவ்விதமாய் பத்வா வழங்கப்பப்போகின்றார்களோ!



## கேள்வியும் பதிலும்

*(1) எழுந்து நின்று தஃழீம் செய்வதை மறுப்போர்கள் "குல்லுபித்அதின் ஸலாலா" எல்லா புதிதாக உருவாக்கப்பட்ட நூதன செயல்களும் வழிகேடே! என்ற நபிவாக்கைக் கொண்டு எழுந்து நின்று தஃழீம் புரிவதையும் பித்அத் என்கிறார்களே!*

இக்கேள்விக்கான பதில் யாதெனில் மேற்கூறப்பட்ட ஹதீது ஷரீபு "ஆம் மக்ஸூஸ் மின்குல் பஃஸ்" அதவாது நபியே கரீம் ﷺ அவர்கள் எல்லா பித்அத்துக்களையும் வழிகேடே எனக் கூறினாலும் அதைக்கொண்டு நாட்டம் "பித்அத்தே சைய்யியா" கெட்ட பித்அத் ஆகும். "பித்அத்தே ஹஸனா" நல்ல பித்அத் வழிகேடன்னும் சட்டத்தில் நுழையாது. இதற்கு ஆதாரமாக குர்ஆன் என்ன கூறுகின்றதுஎன்பதைக் கவனியுங்கள்.

فلما نسواماذكروابه فتحنا عليهم ابواب

كل شيئ

பொருள்:-

அவர்களுக்கு நினைவூட்டப்பட்ட ஒன்றை மறந்து போது சகல விடங்களின் வாயில்களையும் திறந்து கொடுத்தோம். (7:11)

இங்கே நாம் எல்லா வாயில்களையும் திறந்து கொடுத்துள்ளோம் எனக்கூறி இறைவன் காபிர்கள் மீது ரஹ்மத்துடைய வாயிலை திறக்கவில்லையே! எனவே இதுவும் பொதுப்படயாக ஒன்றைக் கூறிய அதில் சிலதை நாடப்படுதல் எனும் சட்டக்கோட்பாட்டில் நுழைகின்றது தொடர்ந்து அல்லாஹ்தஆலா

واوتيت من كل شيئى

பொருள்:-

"பில்கீச்" அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு சகலதையும் கொடுக்கப்பட்டது.

"பில்கிச்" அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு நபி சுலைமான் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் மாளிகை கொடுக்கப் படவில்லை என்பதனால் இதுவும் பொதுப்படயாகக் கூறி சிலதை நாட்டம் எனும் சட்டத்தில் நுழைகின்றது. எனவே மேற் கூறப்பட்ட ஹதீதும் பொதுவாக எல்லா பித்அத்தும் எனக் கூறப்பட்டாலும் அதன்நோக்கம் "பித்அத்தே சைய்யியா" மட்டுமே! இதற்கு ஆதாரமாகசில ஹதீதுகளையும் கவனிப்போம்.

ஹஸ்ரத் ஜரீர் அவர்கள் ஹஸ்ரத் ரசூல் அக்ரம் அவர்கள். கூறியதாகச் சொன்னார்கள்:-

من سن في الاسلام سنة حسنة فله
اجرهاو اجرمن عمل بها من بعده
من غير ان ينقص من اجورهم شيئى
ومن سن في الاسلام سنة سيئة كان
عليه وزرها ووزرمن عمل بها من
بعده من غيران ينقص من اوزارهم
شيئى

பொருள்:-

எவர் இஸ்லாத்தில் நல்லதோர் விடயத்தை ஆரம்பித்து வைக்கின்றாரோ அவருக்கு அதன் நன்மையும், அவ்வேலையை அவர்பின் எவரெல்லாம் புரிகின்றார்களோ அவர்களின் நன்மைகளில் எந்தக் குறைச்சலுமன்றி அவர்கள் பெறும் நன்மைகளையும் பெறுகின்றார். மேலும் எவர் இஸ்லாத்தில் கெட்டதோர் வேலையை ஆரம்பித்து வைக்கின்றாரோ அதற்க்கான பாவத்தையும், அதைப் புரிவோர்களின் பாவத்தையும் பெறுகிறார். *(முஸ்லிம் ஷரீப்,மிஷ்காத் பக்கம் 33)*

இந்த ஹதீத் ஷரிபின் மூலமாக "பித்அத்" என்பது **"பித்அத்தே சைய்யியா"** மாத்திரமல்ல **"பித்அத்தே ஹசனா"** வும் உள்ளது என்பது தெளிவாகிவிட்டது. ஹதீத் ஷரீபின் விரிவுரையாளர்கள் பித்அத்தின் வகைகளை குறிப்பிடுகையில் **"பித்அத்தே முஹர்ரமா", "பித்அத்தே மக்ரூஹ்", "பித்அத்தே வாஜிபா", "பித்அத்தே முஸ்தஹப்பா", "பித்அத்தே முபாஹா"** என ஐந்து வகையாக வகைப்படுத்தியுள்ளார் கள். இதனை விரிவாக அறியவிரும்பின் **மிர்காத் ஷரஹ் மிஷ்காத் பாகம் ஒன்று, பக்கம் 179, அஷிய்யத்துல்லம் ஆத் பாகம் 1, பக்கம் 128, அன்வாருல் ஹதீத் பக்கம் 106** போன்றவைகளை பார்த்துக்கொள்.

மேலும் பித்அத் என்பது ஹசனா, சைய்யியா என்பதற்கு இமாம்ஹஸ்ரத் ஷாபிஈ அவர்கள் கூறும் கருத்தாகிறது.

ما احدث مما يخالف الكتاب اوالسنت او
الاجماع فهوضلالة وماا حدث من الخيرمما
لايخالف شيأ من ذلك فليس بمذموم(مرقاة
شرح مشكوة ج١ص١٧٩)



பொருள்:-

புதிதாக மக்கள் ஏற்படுத்திக்கொண்ட ஒன்று குர்ஆன் ஹதீது, ஸஹாபாக்கள் சரிதை, மார்க்க சட்ட நிபுணர்களான புகஹாக்களின் "இஜ்மாஃ" எனும் ஏகோபித்த முடிவு இவைஅனைத்துக்கும் மாறு பட்டதாயிருப்பின் அது "ஸலாலா" கெட்டவழிகேடாகும். அவ்வாறன்றி மேற்கூறப்பட்டவைகளுக்கு உற்பட்டதாயிருப்பின் அச்செயல் அருளைத் பெற்றுத் தரும் ஒன்றாகும்

*(மிர்காத் ஷரத் மிஷ்காத் பாகம் 1, பக்கம் 179)*

தொடர்ந்து ஹஸ்ரத் ஷெய்க் அப்துல் ஹக் முஹத்தித் திஹ்லவி அவர்கள் கூறுகிறார்கள்:-

آنچہ موافق اصول و قواعد سنت اوست
و قیاس کردہ شد برآں آنرا بدعت
حسنہ گویند۔ و آنچہ مخالف آں باشد
بدعت ضلالت گویند۔

பொருள்:-

மக்களால் புதிதாக உருவாக்கப்பட்ட ஒன்று குர்ஆன், ஹதீது, பிக்ஹ் போன்றவைகளுக்கு நேர்பட்டதாயிருப்பின் அதை **"பித்அத்தே ஹசனா"** என்றும், அவற்றுக்கு நேர்மாற்றமானதாயிருப்பின் அதை **"பித்அத்தே ஸலாலா"** என்றும் பெயரிடப்படும்

*(அஷிய்யத்துல்லம் ஆத் பாகம்1, பக்கம் 135)*

ஐந்து வகையான பித்அத்தில் "பித்அத்தே ஹசனா" "பித்அத்தே சைய்யியா" இவ்விரண்டையும் ஏற்காது மறுக்கும் கூட்டத்தார் இமாம் ஷாபிஈ மற்றும் ஹஸ்ரத் அப்துல் ஹக் முஹத்தித் திஹ்லவி போன்றோரைவிட குர்ஆனையும் ஹத்தையும் விளங்குவோரல்ல. இவ்விமான்கள் மத்தியில் பித்அத் என்பது இவ்விரண்டையும் சேர்த்ததுவே! இதை மறுப்பதோ மேற்சொன்ன ஹதீதையும், இது இடம்பெற்ற ஸஹீஹ் ஹதீத் கிரந்தமான முஸ்லிம்ஷரீபையும், மறுத்தவனாகவும், இமாம் ஷாபிஈ போன்றோரை **"ஜாஹில்"** மடையர்கள் எனக் கூறுவது போன்றாகும்.

**இப்போதும் உனக்கு இவ்விடயம் புரியவில்லை என்றால் அல்லது தெளிவற்றதாக இருக்குமானால், உண்மையான கொள்கையைக் கொண்டோர்களான "அஹ்லுஸ்ஸுன்னத் வல்ஜமாஆ" உலமாக்களை அணுகிக் கேட்டுக்கொள் ஆனால் நீ புரிந்து கொண்ட பின்னரும் பித்அத்தே ஹஸனா, பித்அத்தே சைய்யியா இவ்விரண்டையும்**

ஏற்க்கவும் தயாராக இல்லையெனின் அண்ணல் நபி ﷺ அவர்கள் இவ்வுலகத்திற்க்கு பர்தா இட்டுக்கொண்ட பின்னர் உருவாக்கப்பட்ட அனைத்து காரியங்களையும் அதாவது:-குர்ஆன்கரீமை 30 பகுதிகளாக்குதல், அதில் ருகூஃ, மற்றும் சபர், சேர்வைத்தல், ஹதித் ஷரீபை புத்தக வடிவில் அமைத்தல், அதில் ஸஹீஹ்,ஸஈப், என பருதிபடுத்தல், பிக்ஹ், இல்மே கலாம், உஸூலேஹதீத், உஸூலே பிக்ஹ், இவைகளின் அனைத்து சட்டங்களையும்.ஷரீஅத்தில் ஷாபிஈ ஹனபீ, ஹன்பலீ, மாலிகி என நான்கு மத்ஹபுகள் அமைத்தல் இப்படியாக தரீக்கத்தில் காதிரியா, சிஷ்திய்யா, சஹ்றவர்தியா, நக்ஷபந்தியா போன்றவைகளையும் ஹராம் கூடாத காரியம் என நம்பியவனாக மாறவேண்டியேற்படும். எதற்க்காக இவையாவும் நபியே முஸ்தபா ﷺ அவர்களின் பின்னரே உண்டாக்கப்பட்டதென்பதற்க்காக!

மேலும் "பித்அத்" என்றால் என்ன என்பதை முஸ்லிம் ஷரீபின் விரிவுரையாளர் ஹஸ்ரத் இமாம் நவவீ ؒ அவர்கள் விபரிக்கையில் கூறுகிறார்கள்:-

البدعة كل شيئى عمل على غير مثال سبق
وفي الشرع احداث مالم يكن في عهد رسول
ا لله صلى ا لله عليه وسلم(مرقاة شرح مشكوة

பொருள்:-

பித்அத் என்பது அரபு அகராதியில் எந்த வேலை நம்முன் சென்ற சமுதாயத்தினர் செய்யாது, புதிதாக இப்போது உருவாக்கப்படும் ஒன்று என்றும், ஷரீஅத்தில் ஹஸ்ரத் ரசூல் ﷺ அவர்களின் மறைவுக்குப் பின்னர் எவையெல்லாம் உருவாக்கப்பட்டதோ அவைகள் அனைத்து மாகும். (மிர்காத் ஷரஹ் மிஷ்காத்1:179)

ஆனால் நாம் கூறிவரும், செய்துவரும் ஒன்றை மறுப்போர்கள் மேற்சொன்ன அனைத்து பித்அத்களும் அவர்களிடத்தில் ஏற்றக்கொள்ளப்பட்டதே! இப்படியானவர்கள் அவர்களது உலமாக்களை, இமாம்களை, முப்தி ஸாஹிபுகளைக் கண்டால் எழுந்து நின்று தஃழீம் செய்யும் இவர்கள், ஹராம் எனக் கூறுவது அல்லாஹ்வின் அன்பாளர் எமதருமை கண்மணி நாயகம் ﷺ அவர்களுக்கு தஃழீம் செய்யும் முகமாக "யா நபீ சலாம்அலைக்கும்" போன்ற கஸீதாக்கலை படிக்கும் சமயத்தில் எழுந்து நிற்பதையைத்தான். மேலும் இச்செயலே அவர்களிடத்தில்பித்அத்தே சைய்யியா என கூக்குரலிடுகின்றனர் யாஅல்லாஹ் இப்படியானோர்களக்கு சந்தேகமில்லா புனித



இஸ்லாத்தை உண்மையான முறையில் விளங்கும் சந்தர்ப்பத்தை கொடுப்பாயாக மேலும் உனது நேசரான எமதருமை நபி ﷺ அவர்கள் மீதுகொண்டுள்ள தவறான எண்ணங்களை அகற்றி அன்னவர்களை அன்பு கொண்ட நல்லடியார்களில் சேர்ப்பாயாக! ஆமின்.

(2) மறுப்போர்கள் கேட்கும் கேள்வியில் இதுவும் ஒன்று. அதாவது அருமை ஸஹாபாத் தோழர்கள் தஃழீம் பலவிதத்திலும் செய்தார்கள் ஆனால் எழுந்து நின்று தஃழீம் செய்யவில்லையே நீங்கள் செய்வதேன்? நீங்கள் என்ன அவர்களை விட மஹப்பத்தில்கூடியவர்களா? நிகரற்ற அன்பு கொண்டிருந்த அந்த உத்தம தோழர்கள் இப்படியாக தஃழீம் செய்யவில்லை. அப்படி அவர்களே கண்ணால் கண்டும் செய்யாத ஒன்றை நீங்கள் எப்படி செய்வீர்கள்?

பதில்:- அல்லாஹுதஆலா "வதுஅஸ்ஸிறூஹு வதுவக்கிறூஹு" என்றஆயத் மூலமாக தஃழீம் சங்கை, கௌரவம், செய்வதற்கு கட்டளையிட்டுள்ளான். ஸஹாபாக்கள் புரியாததால் எச்செயலும் கூடாது எனப்படலாகாது. ஸஹாபாக்கள் புரிந்த ஒன்றை ஜாயிஸ் என்பதற்கு அச்செயல் ஆதாரபூர்வமான சான்றாகும் ஆனால் அவர்கள் செய்யாத ஒன்றை செய்வது கூடாத காரியம் என ஒரு போதுமாகாது. ஸஹாபாக்கள் புரியாத கணக்கிட முடியா எத்தனையோ அம்ஷங்களை இன்று நாம் புரிகின்றோம் என்பது குறிப்பிடத்தக்கது.

புகாரி ஷரீபின் விரிவுரையாளர் ஹஸ்ரத் அல்லாமா குச்தலானி ؒ அவர்கள் கூறுகிறார்கள்.

الفعل يدل على الجواز وعدم الفعل لا يدل
على المنع(مواهب لدنيةص٤٩)

பொருள்:-

அவர்கள் செய்த செயலை நாம் செய்யலாம் என்பதற்கு ஆதாரம். ஆனால் அவர்கள் செய்யாததை நாம்செய்வது கூடாது என்பதல்ல (மவாஹிபுல்லதுன்னிய்யா)

மேலும் ஹஸ்ரத் ஷாஹ் அப்துல் அஸீஸ் ஸாஹிபு முஹத்தித் திஹ்லவி ؒ அவர்கள் எழுதுகிறார்கள்:-

نکردن چیزے دیگرست و منع فرمودن چیزے دیگر۔ ملخصاً

செய்யாததது என்பது ஓர் விடயம் தடுத்தது என்பது மற்றுமோர் விடயம்.

ஆகவே ஸஹாபாக்கள் செய்யவில்லை என்பதற்காக எழுந்து நின்று தஃழீம் செய்வதை "ஷிர்க்" என்றோ "குப்ர்" என்றோ. "ஹராம்" என்பதாகவோ. மார்க்கத்தில் இல்லாதது எனக் கூறுவதோ பெருந் தவறாகும்.

சற்றுக் கவனியுங்கள்:- ஸஹாபாத் தோழர்களில் சிலரும் ஹதித் ஷரிப் எழுதியிருக்கிறார்கள். ஆனால் இமாம் புகாரி .... அவர்களைப் போன்று ஒவ்வொரு ஹதிதையும் எழுத முன் குளித்தாகவுமில்லை. நபில் தொழுததாகவுமில்லை. மேலும் உத்தம ஸஹாபாத் தோழர்கள் நடந்தவர்களாக. உட்கார்ந்தநிலையில். நின்ற நிலையில். சாய்ந்திருந்த நிலையில் இப்படிசகலநிலைகளிலும் ஒருவர் மற்றொருவருடன் அண்ணல் நபிﷺ அவர்களின் பொன்மொழிகளை பயான் செய்திருக்கிறார்கள். ஆனால் இமாம் மாலிக்ؓ அவர்களைப் போன்று ஹதித் ஷரீப் பயான் செய்வதற்காக குளிக்கவுமில்லை. புத்தாடை அணியவுமில்லை. எனவே ஸஹாபாக்கள் இவ்விதமெல்லாம் புரியாததால் ஹஸ்ரத் இமாம் புகாரி. ஹஸ்ரத் இமாம் மாலிக்ؓ போன்றோர்கள் ஹதித் ஷரீபுக்கு செய்த மரியாதை தஃழீம் ஹராமானதாக. அல்லது ஷிர்க்கான ஒன்றாய்ப்போய்விடுமா? இல்லவே இல்லை மாறாக சந்தேகமின்றி அச்செயல்கள் யாவும் ஜாயிஸாகவே இருக்கும்.

ஆக இதே போன்று சங்கைக்குரிய ஸஹாபாக்கள் எழுந்து நின்றுதஃழீம் மரியாதை செய்யவில்லை என்றிருப்பினும், நாம் அந்தக்கோமான்ﷺ அவர்களுக்கு அவ்விதமாய்ச் செய்து கொளரவப் படுத்துவது ஆகுமான ஒன்றுதான். ஒருபோதும்அச்செயல் ஷிர்க்காய்ப் போய்விடா!

*(3)* ஹதித் ஷரீபில் ஒருவர் மற்றவருக்கு எழுந்து நின்று தஃழீம் செய்வதை தடுத்து வந்துள்ளதே! என்பது. ஹஸ்ரத் அபூ உமாமாؓ அவர்கள் நபிﷺ அவர்கள் கூறியதாக அறிவிக்கின்றார்கள்.

لاتقوموا كما تقوم الاعاجم يعظم بعضها

بعضا (مشكوة شريف ص٤٠٣)

**பொருள்:-**

அஜமிகள் ஒருவர் மற்றவருக்கு தஃழீம் செய்வதற்காக எழுந்து நிற்பது போன்று நீங்கள் செய்யவேண்டாம் (மிஷ்காத்ஷரீப் பக்கம் 403)

மேலும் ஹஸ்ரத் அமீர் முஆவியாؓ வைத் தொட்டும் ரசூல்அஃஸம் ﷺ அவர்கள் கூறியதாக கூறினார்கள்.



من سره ان يتمثل له الرجال قياما

فليتبؤأ مقعده من النار(مشكوة شريف

**பொருள்:-**

எவர் தனக்கு தஃழீம் செய்வதற்காக மக்கள் எழுந்துநிற்பதை விரும்புவாரோ அவர் தான் செல்லுமிடத்தை நரகமாக்கிக் கொண்டான். (மிஷ்காத் பக்கம் 403)

மேலும் ஹஸ்ரத் அனஸ்ؓ அவர்களைத் தொட்டும் ரிவாயத் செய்யப்பட்டுள்ளது.

كانوا اذارأوه لم يقوموالما يفعلوا من

كراهيته لذلك(مشكوة شريف ص٤٠٣)

**பொருள்:-**

ஸஹாபாக்கள் நபிகட்கரசர்ﷺ அவர்களைக் கண்டால் எழுந்து நின்று தஃழீம் செய்வோராக இருக்கவில்லை. நபியவர்கள் அவ்வாறு செய்வதை வெறுப்போராக இருந்ததற்காகவே (மிஷ்காத் ஷரீப் பக்கம் 403)

"தஃழீம்" மரியாதை செய்வதற்காக எழுந்து நிற்பது அனுமதிக்கபடாத ஒன்றாகும் என்பது மேற்கூறிய ஹதிதுகள் மூலமாக தெரியவருகின்றது. இதனால் நாம் எவ்விதம் செய்வதுஎன்பதே இவர்களின் பெரும் வாதாட்டம்.

இவ்வாதாட்டத்திற்கான பதில் யாதெனில் அதாவது:- எழுந்துநின்று தஃழீம் செய்வதை தடுத்து வந்த ஹதிதுகள் எல்லா நிலைகளிலுமல்ல. மாறாக ஒருமனிதன் தான் அமர்ந்தவனாயிருக்க. மக்கள் அவனுக்கு எழுந்து நின்று மரியாதை செய்வதை விருப்பம் கொள்வானேயால் மாத்திமே! அவ்விதமாய் அவனுக்குப் புரிவது தடுக்கப்பட்டதாகும். ஏனெனில் ஹஸ்ரத் சஃத் பின் முஆத்ؓ அவர்கள்வருகை தந்தபோது அண்ணலார் நபியே அக்ரம்ﷺ அவர்களே வீற்றிருந்த தோழர்களை நோக்கி "கூமூ இலா ஸையிதுகும்" உங்கள் தலைவருக்காக எழுந்து நில்லுங்கள் எனக் கூறினார்கள்.

ஹஸ்ரத் அப்துல் ஹக் முஹத்தித் திஹ்லவி ؓ அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

பொருள்:-

எழுந்து நின்று தஃழீம் செய்வது "மக்ரூஹ்" வெறுக்கப்பட்டதல்ல. மாறாக அவ்வாறு ஒருவர் தனக்குப்புரிவதை விருப்பம் கொள்வது தடுக்கப்பட்டதாகும். தனக்குஅவ்விதம் புரிவதை விரும்பாத ஒரு பெரியாருக்குப் புரிவதும் மக்ரூஹ் அல்ல. ஹஸ்ரத் காழி இயாழ் அவர்கள் கூறுகையில், எவனொருவன் தான் அமர்ந்திருக்க மக்கள் எழுந்து நிற்பதும், அல்லது அவர் உட்காரும் வரை எழுந்து நிற்பதை விரும்பும் ஒருவனுக்கே அவ்விதமாக செய்வது விலக்கப்பட்டதாகும்

(அஷிய்யதுல்லம் ஆத் 4:28)

قیام مکروہ بعینہٖ نیست بلکہ مکروہ
محبت قیام ست از کسیکہ قیام کردہ
شدہ است برائے وے۔ و اگر
وے محبت قیام نہ دارد قیام برائے
وے مکروہ نبود۔ قاضی عیاض
مالکی گفتہ کہ قیام منہی عنہ درحق کسے
ست کہ نشستہ باشد و ایستادہ باشند
پیش وے مردم تا نشستن وے۔

மேலும் முஹ்யிஸ் ஸுன்னா ஹஸ்ரத் இமாம் நவவீ ؓ அவர்கள் "கூமு இலா ஸையிதிகும்" என்பதற்கு விரிவுரை செய்கையில்

فيه اكرام اهل الفضل وتلقيهم بالقيام لهم اذا
اقبلوا هكذا احتج به جماهير العلماء لاستحباب
القيام قال القاضي وليس هذامن القيام المنهي
عنه وانماذاك فيمن يقومون عليه وهوجالس
ويمثلون قياما طول جلوسه قلت القيام للقادم
من اهل الفضل مستحب وقدجاء فيه احاديث
ولم يصح في النهىعنه شيئى صريح(مسلم شريف
مع نووي ج٢ص٩٥)



பொருள்:-

இந்த ஹதீத் ஷரீப் மூலமாக இறைநேசர்களுக்கு தஃழீம் செய்தல், அவர்கள் முன்னோக்கும் சமயத்தில் எழுந்துநிற்றல், அவர்களைச் சென்று தரிசித்தல் போன்றது ஆகுமென்பது தரிபாடர்கின்றது. தஃழீம் செய்வதற்காக எழுந்து நிற்பது முஸ்தஹப்பு என்பதற்கு அறிஞர்கள் கூட்டம் இந்த ஹதிதை ஆதாரமாக எடுத்துள்ளார்கள். ஹஸ்ரத் காழீ இயாழ் ؓ அவர்கள் இவ்வாறு செய்வதை விலக்கப்பட்டது எழுந்தது நிற்பதால் அல்ல. மாறாக தடுக்கப்பட்டது ஒருவனுக்காகும். எவனுக்கென்றால் அவனுமோ உட்காந்திருக்க வீற்றிருப்போர் எழுந்து நிற்பதையும், அல்லது அப்படியானவன் உட்காரும் வரை எழுந்து நிற்பதையும் விருப்பம் கொள்ளும் ஒருவனின் விடையத்திலேயே! ஹஸ்ரத் இமாம் நவவீ ؓ கூறுகிறார்கள் நான் கூறுகின்றேன். அதாவது:- நல்லடியார்களின் வருகைக்காக எழுந்துநின்று தஃழீம் செய்வது முஸ்ஹப்பாகும். அவ்விடயத்தில் பலஹதிதுகள் உள்ளன. அது கூடாத விடயம் என்பதற்கு எந்த தெளிவான ஹதீதும் இல்லை.

(முஸ்லிம் ஷரீப் இமாம் நவவீ 5:95)

மேலும் ஹதீத் ஷரீப் ஹஸ்ரத் கஃபு பின் மாலிக் ؓ அவர்கள் கூறுகிறார்கள்:- நான் தௌபா செய்து கொண்ட பின்னர் ரசூல் முஸ்தபா ﷺ அவர்களின் திருச்சபைக்கு சென்றபோது.

فقام طلحة بن عبيدا لله يهرول حتى
صافحني وهنأني(مسلم شريف ج٢ص٢٦٢)

பொருள்:-

ஹஸ்ரத் தல்ஹா பின் உபைதில்லாஹ் ؓ அவர்கள்எழுந்து நின்றார்கள். மேலும் விரைந்தோடிவந்து என்னைகட்டிப்பிடித்து வாழ்த்தினார்கள்.

இந்த ஹதிதுக்கும் கீழே ஹஸ்ரத் இமாம் நவவீ ؓ அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

فيه استحباب مصافحة القادم والقيام
له اكراما والهرولة الى لقائه(مسلم

வரும் ஒருவரை முஸாபஹா செய்வதும், அவருக்கு தஃழீம் செய்வதற்காக எழுந்து நிற்பதும், விரைந்தோடி அவரைச் சந்திப்பதும்

ஆகுமான காரியங்கள் என்பது இதன் மூலம் உறுதிப்படுத்தப்படுகிறது. (முஸ்லிம் ஷரீப் இமாம் நவவீ 5:262)

மறுப்போர்கள் எடுத்துக்காட்டும் ஹஸ்ரத் அமீர் முஆவியா ரலி அவர்கள் அறிவுப்புச் செய்த ஹதீதின் கீழே ஹஸ்ரத் ஷெய்க் அப்துல் ஹக் முஹத்தித் திஹ்லவி குறிப்பிட்டுள்ளார்கள்.

ازیں جا معلوم می شود کہ مکروہ و منہی عنہ
دوست داشتن بر پا ایستادن مردم بجہت
بطریق تعظیم و تکبر وانچہ بریں وجہ نبود مکروہ
نباشد۔ (اشعۃ اللمعات ج ۴ ص ۲۹)

பொருள்:-

இந்த ஹதீதின் மூலமாக எவன் தனக்கு மரியாதை செய்வதற்காக எழுந்து நிற்பதை விருப்பம் கொள்வானோ அவனுக்கு அவ்விதம் புரிவது விலக்கப்பட்டதாதும். இவ்விதமல்லாத ஓர் பெரியாருக்காகப் புரிவது மக்ருஹோ, விலக்கலோ அல்ல.

இவ்விதமெல்லாம் ஆதாரம் இருப்பதனாலயே மார்க்க சட்டக்கலை நிபுணர்கள் எழுந்து நின்று தஃழீம் மரியாதைசெய்வதை ஆகுமெனத் திடகாத்திரமாகக் கூறியுள்ளார்கள்.

ஷெய்க் அலாவுத்தின் முஹம்மத் பின் அலீஹஸ்கபீ ரஹ் கூறுகிறார்கள்:-

يجوز بل يندب القيام تعظيما للقادم كما
يجوز القيام ولو للقارئى بين يدى العالم (در
مختار مع شامى ج٥ص٢٤٦)

பொருள்:-

வரும் ஒருவருக்கு தஃழீம் செய்வதற்காக எழுந்து நிற்பது ஆகுமானது மட்டுமன்றி முஸ்ஹப்புமாகும். எப்படி என்றால் குர்ஆனை ஓதிக்கொண்டிருக்கும் ஒருவன் மார்க்க அறிஞரான ஆலிமைக் கண்டதும் எழுந்து நின்று மரியாதை செய்வது ஆகுமானதோ!

(துர்ருல் முக்தார் 5:246)



இதற்குக் கீழே ஹஸ்ரத் அல்லாமா இப்னு ஆபிதீன் ரஹ் கூறுகிறார்கள்

قيام قارئى القرآن لمن يجيئ تعظيما لا يكره
اذا كان ممن يستحق التعظيم (در مختار ج٥ص٢٤٦)

பொருள்:-

வரும் ஒருவர் தஃழீம மரியாதை செய்வதற்கு தகுதி உள்ளவராயிருப்பின் குர்ஆன் ஓதும் ஒருவன் எழுந்து நின்று அவரை கௌரவப்படுத்துவது மக்ருஹான ஒன்றல்ல. (றத்துல் முக்தார் 5:246)

ஹஸ்ரத் ஷெய்க் அப்துல் ஹக் முஹத்தித் திஹ்லவி ரஹ் குறிப்பிட்டுள்ளார்கள்.

در مطالب المؤمنين از قنيہ نقل کردہ
کہ مکروہ نيست قيام جالس از برائے کسے
کہ در آمدہ است بروئے بجہت تعظيم۔
(اشعۃ اللمعات ج ۴ ص ۲۸)

பொருள்:-

மதாலிபுல் முஃமினீன் எனும் கிரந்தத்தில் வந்துள்ளது: உட்கார்ந்திருக்கும் ஒருவன் வருபவருக்காக எழுந்து நின்றுமரியாதை செய்வது மக்ரூஹானதல்ல. (அஷிய்யத்துல் லம்ஆத் 4:28)

இதுவரை நாம் அண்ணல் நபியின் உயர் தன்மையை மக்களனைவரும் ஏற்று அதன் பிரகாரம் அமல் செய்து ஈருலகிலும் ஈடேற்றம் பெறமுப்தி ஜலாலுத்தீன் அஹ்மத் அம்ஜதி ரஹ் அவர்களால் உர்து மொழியில் கோர்வை செய்யப்பட்ட "தஃழீம் நபி ஸல்" என்ற பெயர் கொண்ட இச்சிறு நூலை அடியான் மக்களின் நலம் கருதி தமிழ் பெயர்ப்புச் செய்தேன்.

யா அல்லாஹ்! இச்சிறு பனியை ஏற்று தொடர்ந்தும் இப்படியான தீனின் சேவைகளை செம்மையாக செய்ய நல்லுதவி புரிவாயாக.

وآخر دعوانا ان الحمد لله رب العالمين.



# நன்றியுரை

இன்று எத்திக்கில் பார்த்தாலும் குறிப்பாக பாகிஸ்தான், இந்தியா, பங்கலாதேஷ், இலங்கை போன்ற நாடுகளில் ஒவ்வோர் கூட்டுமும் தனித்தனி பெயர்களைச் சூட்டிக்கொண்டு இஸ்லாமியர்கள் தௌஹீதியர்கள் என்ற போர்வையில் உண்மையான முஸ்லீம் சகோதரர்களின் உள்ளங்களை கவரச்செய்து அவர்களை தன் பக்கம் வசப்படுத்திக் கொண்டிருக் கின்றனர். இவர்கள் பல கூட்டமாக தனித்தனி பெயர்களைக் கொண்டோராயினும் வஹ்ஹாபிகள் என்ற ஒரு பொதுப் பெயரிலேயே இடம் பெறுபவர்கள். இவர்கள் இஸ்லாம் ஆரம்பித்த முதல் உலகம் அழியும் வரை உண்மையான அகீதா கொள்கையை கொண்டவர்களான அஹ்லுஸ்ஸுன்னத் வல்ஜமாவூ என்ற உண்மைத் தத்துவ கொள்கையை வெறுப்போராகவும், மறுப் போராகவும் இருப்பர்.

உண்மை தூங்கி, பொய் தலை நிமிர்ந்து ஊசலாடிக் கொண்டிருக்கும் இச்சந்தர்ப்பத்தில் சிறுபான்மை முஸ்லீம்களை உள்ளடக்கிய இலங்கையில் மேற்சொன்ன பொய்யர்களின் வாதாட்டங்களை எடுத்துக்காட்டி உண்மைத் தத்துவ கொள்கையை குர்ஆன், ஹதீது, இமாம்கள், பெரியார்கள் கூறும் கூற்றுக்களைச் சுட்டிக்காட்டி இலைஞர் சமுதாயத்தை விழிப்புறச் செய்யும் ஒரே ஒரு இயக்கம் ஜம்யிய்யத் இஷாஅத் அஹ்லுஸ்ஸுஹ்வே என்பதில் சந்தேகமில்லை.

எனவே இவ்வியக்கம் தொடர்ந்தும் தன் சேவையில் அயராது சோர்ந்திடாது செயல்பட்டு வாலிபர்களான எம்மை விழிப் புணர்ச்சியுடன் செயல்பட வல்ல அல்லாஹ் தன் பிரியத்திற்குரிய முஹம்மத் முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்களின் பொருட்டால் தௌபீக் செய்வானாக! ஆமீன்.

வாலிபர் சமுதாயம்.